லேசான காகிதப்பதிப்பு.
தனிப்பிரதி, 5½ அணு.
பழைய பிரதி, 6 ,,

சந்தாவின் விவரம்.
ஒரு வருஷத்துக்கு ரூ. 4.
6 மாதத்துக்கு ,, 2-2.




அறிவைப்பரவச்
செய்வதற்கான

மாதாந்தரத்
தமிழ்ப்பத்திரிகை.

*The Publishing Agency reserves to itself the right of republishing separately matters that appear in the Viveka Chintamani.*

புத்தகம் 10.] 1901ஆம் அக்டோபர்மீ [இலக்கம் 6.

## Terms of Subscription to the 'Viveka Chintamani.'

**Thick Paper Edition** for Patrons, Reading Rooms, School and Circulating Libraries, &c.

Minimum Subscription Rs. 5 per annum.

Single Copy 7½ As.: Back Nos. 8 As. each.

ENGLISH & FOREIGN SUBSCRIPTION 7*s.* 6*d.* NET PER ANNUM.

**Thin Paper Edition** for the People:—

SUBSCRN. PRICE: YEARLY RS. 4; HALF-YEARLY RS. 2-2.

SINGLE COPY, CURRENT NO. 5½ AS.; BACK NOS. 6 AS. EACH.

ENGLISH & FOREIGN SUBSCRIPTION 5*s.* 6*d.* NET PER ANNUM.

**If strictly Prepaid** at the commencement of the term, (*i. e.*, in May of each year) 8 As. discount, off the annual rate, and 4 As. off the half-yearly rate.

Subscriptions entered to begin with only April or May of each year. Enrolled Subscribers may not withdraw except at the end of the year.

☞ To regular annual subscribers 2 months' grace is allowed for the prepayment of subscription, and in the case of regular half-yearly subscribers 3 weeks' time, within which all subscriptions should be paid to entitle them to the discounts allowed.

Subscriptions cannot be closed in the middle of a Volume, though regular subscribers may elect to pay their subscriptions in half-yearly instalments. *All notices for discontinuance are to be given in the beginning of the new year, i. e., in April or May; for otherwise one should have to pay for the whole of the current volume.* Outstanding subscriptions are often realised by V. P. P. to prevent accumulation of arrears.

In all business correspondence, Subscribers are requested to quote their register number found on the wrapper, as it would ensure prompt attention and save vexatious delay and needless correspondence.

## விவேகசிந்தாமணி சந்தாவிவரம்.

தளமான காகிதப்பதிப்பு:—அத்தியக்ஷர்கள், ரீடிங்ரூம்கள், புத்தகசாலைகள் முதலான ஸ்தாபனங்களுக்கு உபயோகமானது. ☞ வருஷ சந்தா குறைந்தது ரூ. 5. தனிப்பிரதி 7½ அணு. பழைய பிரதி 8 அணு.

லேசானகாகிதப்பதிப்பு:—சாதாரணமாய் எல்லா ஜனங்களுக்கும் உபயோகமானது.

வருஷசந்தா ரூ. 4. 6-மாசத்துக்கு ரூ. 2-2.
தனிப்பிரதி 5½ அணு. பழைய பிரதி 6 அணு.

வருஷாரம்பத்திலே (அதாவது மேமாசத்தில்) தவருமல் கட்டினுல் வருஷசந்தாவில் 8 அணுவும், 6-மாச சந்தாவில் 4 அணுவும் தள்ளிக்கொடுக்கப்படும்.

ஏப்பிரல் அல்லது மேமாதம் துவக்கியே சந்தாக்கணக்கு வைக்கப்படும். ரிஜிஸ்தரான சந்தாதாரர்கள் வருஷமுடிவிலன்றி மற்றபடி சந்தாவை நிறுத்துதல் கூடாது.

☞ வருஷக்கணக்காக ஒழுங்காய்ச் சந்தாசெலுத்திவருகிறவர்களுக்கு இரண்டு மாசத்தவணையும், 6-மாசக்கணக்காக ஒழுங்காய்ச்சந்தா செலுத்திவருகிறவர்களுக்கு மூன்றுவாரத்தவணையும் கொடுக்கப்படும். அதற்குள் சந்தாவை முன்பணமாகச் செலுத்துகிறவர்களுக்கே மேற்கண்ட தள்ளுபடி செய்துகொடுக்கப்படும்.

பத்திரிகையை வருஷமத்தியில் நிறுத்தக்கூடாது. நிறுத்தவிரும்புகிறவர்கள் வருஷாரம்பத்தில் அதாவது ஏப்பிரல் அல்லது மே மாசத்திலே நோட்டீஸ் கொடுக்கவேண்டும்; அப்படிக்கின்றி மத்தியில் நிறுத்தினுல் அந்தவருஷ முழுவதற்குமுள்ள சந்தாவைச் செலுத்திவிடவேண்டும். சந்தாபாக்கிகள் V. P. P. மூலமாக வசூல்செய்யப்படும்.

கையொப்பக்காரர்கள் ஆபீசுக்குக் கடிதமெழுதும்போதெல்லாம் அவர்கள் ரிஜிஸ்தர் நம்பரைக் குறிப்பிட்டெழுதவேண்டும். அப்படிச்செய்வதால் அவர்கள் எழுதும் கடிதம் உடனே கவனிக்கப்படுவதன்றி அதிக தாமதத்துக்கும் வீண் கடிதப்போக்குவரவுக்கும் இடமிராது.

NOTICE.

The Editor of this Journal who has just recovered from a long and tedious illness being compelled under medical advice to take 6 months' complete rest, the conduct of this Journal has been entrusted to a valued friend, who will carry it on, on the same lines as hither tofaore. All literary contributions to be addressed merely "To the Editor" without any name.

1ST NOVEMBER 1901.

---

விளம்பரம்.

இப்பத்திரிகையின் ஆசிரியர் நீடித்து காயலாவாக விருந்து இப்பொழுதுதான் அனுகூலப்பட்டிருக்கிறார். இன்னும் 6-மாசத்துக்கு யாதொருவேலையும் செய்யக்கூடாதென்று டாக்டர் சொல்லுவதால், இப்பத்திரிகையை நடத்தும் வேலை, நமது ஆரிய நண்பர் ஒருவர்வசம் ஒப்புவிக்கப்பட்டிருக்கிறது. அவர் எப்போதும்போல் இப்பத்திரிகையை நடத்திவருவார். விஷயங்கள் எழுதியனுப்புவோர் "பத்திராசிரியருக்கு" என்று வேறுபேர் குறிக்காமல் விலாசம் எழுதவேண்டும்.

1901-ஆ நவம்பர்மீ 1உ.

---

A DISCOURSE ON FLOWERS.

## புஷ்பங்கள்.

புஷ்பங்கள், கோட்டுப்பூ, கொடிப்பூ, நீர்ப்பூ, புதர்ப்பூ என்று நான்குவகைப்படும்.

புஷ்பங்களில் சிறந்தது தாமரை. 'பூவினுக்கருங்கலம் பொங்குதாமரை' என்றும் 'பூவிற்சிறந்தது பொறிவாழ்பூவே' என்றும் இதனைக் கவிகள் பலவாறு துதித்திருக்கின்றனர். திருமகள் இருப்பதும் கலைமகள் இருப்பதும் நான்முகன் வசிப்பதும் எல்லாம் இத்தாமரை மலரே. மன்மதன் பாணங்களில் ஒன்றாயிருப்பதும் இந்த வனசமலரே. அன்றியும் திருமால் உந்தியும் கண்ணும் கையிற்படையும் யாவும் இப்புஷ்பமே. எல்லா ஜீவராசிகளுக்கும் உயிர்நிலையாயிருக்கும் இருதயமும் இத்தாமரை போன்றதே. கவிகளாற் கூறப்படும் காவியங்களிலும் கற்பனைகளிலும் இத்தாமரைபோல வேறொன்றும் அவ்வளவு முதன்மையாகச் சிறப்பிக்கப்படாது. பொய்கையும் தடங்களும் இத்தாமரையாற்றான்பொலிவு பெறவேண்டும். தாமரையில்லாத்தடாகம் மக்களில்லா மனைபோலவும், மதியமில்லா வான்போலவும் பொலிவுபெறாதென்பர். மாதர்முகமும் கண்களும் கரமும் தாளும் இம்மலருக்கே உவமிக்கப்பட்டுச் சிறப்படைதல்வேண்டும். இம்மலரைப்பற்றிக் கவிகள் உரைக்கும் வருணனைகளுக்கும் விசித்திரங்களுக்கும் அளவேயில்லை. இம்மலர் காலையிலலர்ந்து மாலையிற் கூம்புதலால் சூரியனுக்கு விருப்பமான மலராகப்பாவித்துச் சூரியனைத் தாமரை நண்பனென்றும் தாமரை நாயகனென்றும் சொல்லுவர். வண்டுகளுக்கு இம்மலர் மதுக்குடமாகும். அன்னங்களுக்குத் தாங்குதற்குரிய இனியசேர்க்கையாகும். சங்குகளுக்கு இது தாய்வீடாகும். அன்றியும் இம்மலரில் முத்தும் பிறக்கும். இம்மலரின் சிறப்பை இவ்வளவவ்வளவென்று சொல்லமுடியாது.

இதற்கு அடுத்தபடியாக முல்லைமலரைச் சொல்லலாம். இம்மலர் தாமரைபோலத் தேவர்கட்குரித்தாய்ச் சிறப்படையாவிடினும் இதன் அழகினாலும் இனியவாசனையாலும் மானிடர்க்குள் இதற்குச் சிறப்புக்குறைவில்லை. இது ஆயர்கள்வாழும் காடும் காடுசார்ந்த நிலமுமாகிய முல்லைநிலத்துக்குரியதாய் அந்நிலத்துக்கும் தன் பெயரைக்கொடுக்கும். இதுவும் தாமரைபோலவே மன்மதனுக்கு ஓர் பாணமாகும். இம்மலராற் றொடுத்தமாலை கற்பிற்சிறந்த மகளிர்க்கு உரியது. இதற்குக்கற்பென்றே ஒரு பேருள்ளது. இம்மலர் சுவச்சமான வெண்ணிறமுள்ளதாயிருத்தலினாலும் வெண்ணிறமானது தூய்மைக்கு சர்வப்பிரசித்தமான அறிகுறியானதினாலும் அக்காரணம் பற்றித் தூயசிந்தையுடைய கற்பிற் சிறந்த பெண்களுக்கு இஃது உரியதாகியது போலும். இம்மலரரும்புகள் கவிகளால் பெண்களுடைய பல்லுக்கு உவமிக்கப்படும். அன்றியும் இம்மலரில் வண்டுகள் மொய்த்தலைப்பற்றிக் கவிகள் கூறும் கற்பனைகள் பலவுள.

"மல்லிகை வெண்சங்காவண்டே வான் கருப்பு
வில்லி கணைதெரிந்து மெய்காப்ப-முல்லைமலர்
மென்மாலை தோளசைய மெல்ல நடந்ததே
புன்மாலை யந்திப்பொழுது"

என்னும் புகழேந்திப்புலவர் பாடலை யாவர் அறியாதவர். மல்லிகை யென்பதும், முல்லை யென்பதும், ஓரினத்தைச் சேர்ந்த புஷ்பங்களேயாம். மல்லிகை சிறிது உருவிற்பெரிதாகியும், முல்லை சிறிதாகியும் இருக்குமன்றி வேறில்லை. இவ்வினத்தில் பலபேதங்கள் உள்ளன.

இவை தவிர இன்னம் கவிகளாலெடுத்துக் கூறப்படும் புஷ்பங்கள் குமுதம், குவளை, காந்தள், காயா, கோங்கு, சண்பகம் செருந்தி, கடம்பு, புன்னை, கொன்றை, யென்று பலவகையுள்ளன. இவற்றுள் கடம்பு, முருகக்கடவுளுக்கும், கொன்றை சிவபெருமானுக்கும், உரியமலர்களாகும். குமுதம் மாலையில் மலர்தலினாலே இதைச் சந்திரனுக்கு விருப்பமுடையதாகக் கொண்டு அச்சந்திரனைக் குமுதநாயகனென்றும், குமுதநண்பனென்றும் கூறுவர். கவிவருணனைகளில் குமுதம் வாய்க்கும், குவளை கண்களுக்கும் உவமையாகக்கூறப்படும். கருங்குவளை அல்லது நீலோற்பலமென்னும் இப்புஷ்பம் மன்மதன் பாணங்களில் ஒன்றாகவும் கூறப்படும். காந்தள் கைக்கும், கோங்கு தனத்துக்கும், அனிச்சம் மென்மைக்கும் உவமையாகக்கூறப்படும்.

இனிக்கவிகளாற் கூறப்படாத செவ்வந்தி, ரோஜா, சூரியகாந்தம், சம்பங்கி, முதலான அநேக புஷ்பங்கள் உள்ளன. இவற்றைக் கவிகள்கூறாமைக்குக்காரணம் இவை இதர தேசங்களில் நின்று நூதனமாகக் கொணர்ந்தவைபோலும்.

அவற்றுள் முக்கியமானவை செவ்வந்தியும், ரோஜாவுமாம். செவ்வந்தி மலருக்கு மல்லிகைபோல அவ்வளவு பரிமளமில்லாவிடினும் அதன் பொன்னிறமான கிண்ணம்போன்ற வடிவினாலும் ஒளியினாலும் அலங்காரத்தை அபேக்ஷிப்பவர்களால் நன்குமதித்துக்கொள்ளப்படும். ரோஜாமலர் அங்கிலேயரால் கொண்டுவரப்பட்டதென்பதை அதன் பெயரேதெரிவிக்கும். இம்மலர் இங்கிலாந்தில் காட்டுப்பூவாகவும் தோட்டப்பூவாகவும் அபரிமிதமாகப் பூப்பதாயினும் இந்நாட்டில் விசேஷமாகப் பிரசித்தியடையக்காணோம். வெள்ளைக்காரர் பங்களாக்களிலும், தோட்டங்களிலும், அருமருந்து போலப்பயிராகின்றது. ஆயினும் இம்மலர் வட இந்தியாவில் கங்கா தீரத்தில் காசிப்பூர் என்னுமிடத்திலும் காஸ்மீரத்திலும் மிகுதியாகப்பயிர் செய்யப்பட்டு வருகின்றது. இம்மலர் சூடிக்கொள்வதற் குபயோகமாவதன்றிப் பன்னீர் அத்தர் முதலிய சுகந்தத்திரவியங்கள் செய்வதற்கும் உபயோகப்படும். இங்கிலீஷ்கவிகள் இம்மலரை விசேஷமாக வருணனைகளில் எடுத்துக்கூறுவர். இம்மலர் அழகினும் மணத்திலும் மிகச் சிறந்ததென்பதற்கு யாதும் ஐயமில்லை. முருங்கைப்பூ பார்வைக் கழகாயிருந்து வாசனையற்றிருப்பது போலச் சம்பங்கிவாசனைக்கேயன்றி வனப்புக்கு யோக்கியமன்று. மகிழ் இனியவாசனையுடையது. தாழம்பூவும், சண்பகமும், மிகுந்தவாசனையுடையன.

மேற்கூறியவை தவிர இன்னம் எவ்வளவோ புஷ்பங்களுள்ளன. அவற்றை யுரைக்கின் விரியுமாதலின் கூறாது விடுத்தோம். இப்புஷ்பங்களில் உள்ள அழகும் காந்தியும் மணமும் மென்மையும் அவற்றை உற்றுநோக்கி உவகையோடும் சிந்திப்பாருக்குச் சர்வஜீவதயாபராகிய கடவுளுடைய பேரறிவும் ஆற்றலும் அருளும் நன்மையும் விளங்காமற் போகாது.

---

### ABDUR RAHMAN KHAN.
### THE LATE AMIR OF AFGHANISTAN.
### காலம்சென்ற ஆப்கானிஸ்தானத்தின் அமீர்.

---

ஆப்கானிஸ்தானம் என்பது இந்தியாவுக்கு வடமேற்கில் இத்தேயத்தை ஒட்டியிருக்

கும் ஒரு சிறு தேசம். இதற்குப் பூர்வத்தில் காந்தாரம் என்று பெயர். இது நெடுநாளாய் மகம்மதிய ஜாதியாரால் குடியேறப்பட்டு அவருடைய ஆதீனத்தில் இருந்து வருகிறது. இத்தேசத்தில் சண்டையும் கலகமும் நம திந்துதேசத்திலு மதிகம். எத்தேசத்தார் எப்போது வந்தபோதிலும் இந்நாட்டு வழியாகவே நம்தேசத்துக்குப் படையெடுத்து வந்திருக்கிறார்கள். ஆரியர், தக்ஷகர், பாரசீகர், கிரேக்கர் அராபியர், துருக்கர், முதலாகப், பிற்காலத்தில் வந்த ஐரோப்பியர்களைத்தவிர மற்றிங்கு வந்தவர்கள் பலருக்கும் இதுவே ராஜமார்க்கம். அங்கிலேயர் தமது செங்கொடியை ஹிமஸ் ஸேதுபரியந்தம் பறக்கக்கட்டிய பின்னரும், இவ்வழி முற்றிலும் அடைபட்டதில்லை. சிறிது காலம் பிரான்சுக்காரர் இவ்வழியே வருவாரென்னும் பயம் மிகுந்திருந்தது. இப்போது அப்பயம்நீங்கினும், தலைவலிபோகத் திருகுவலி வந்ததாமென்று, அதிலும் மேலான அச்சமொன்று தோன்றியிருக்கின்றது. உருஷிய தேசத்தார் நாளுக்குநாள் தங்கள் சேனையை விருத்திபண்ணி இராச்சியத்தை வியாபிக்கச் செய்துவருகின்றனர். இவர்கள் இப்போது மத்திய ஆசியா முழுதும் ஸ்வாதீனப்படுத்திக் கொண்டு ஆப்கானிஸ்தானத்தின் எல்லையில் நின்று இந்தியாவின்மேற் பாய்வதற்குச் சமயம் பார்த்துக்கொண்டிருக்கின்றனர். அங்கிலேயர் தாம் இந்நாட்டுக்கு அதிபதிகளாகாமற் போயிருந்தார்கள், இது உருஷியக்கரடியின் வாய்க்கு நெடுநாளைக்கு முன்னே இரையாய்ப்போயிருக்கவேண்டும். அங்கிலேயருடைய பராக்கிரமமாகிய அக்னிஜ்வாலைக்கு அஞ்சி முன்னேறாமல் அடங்கியிருக்கின்றது. ஆதலின், ஆப்கான் தேசமானது சீர்குலையாமல் நம் துரைத்தனத்தாரோடு சமாதானமாய் ஒன்றியிருத்தல் நமது தேசத்தின் நன்மைக்கு இன்றியமையாதது. அதனால் நமது துரைத்தனத்தார் இதனை நெடுங்காலமாய் ஆதரித்து வருகிறார்கள்.

இத்தேசத்துக்கு அமீர் (அரசன்) ஆகிய அப்தர் ரஹ்மன் என்பவர், இந்த அக்டோபர் மாதம் மூன்றாம் தேதியன்று, சிறிது சுரமாயிருந்து தேகவியோகமானார். இவர் பாரக்ஸி என்னும் ஆப்கானிய ஜாதியைச்சேர்ந்தவர். 1830-ம் வருஷத்தில் ஜனித்தவர். இவருக்கு முன் அரசாண்டிருந்த ஷர் ஆலி, என்னும் அமீருக்கு மருமகனாகிய ஆப்ஸல்கான் என்பவருக்கு மூத்த புதல்வர். தம் பிதாவுக்கும் அவரது பெரிய தகப்பனாருக்கும் உண்டான சண்டையில் பிதாவின் பக்ஷமாய் நின்று அநேகம் வெற்றிகளைப்பெற்றவர். பின்பு பால்கு மாகாணத்துக்கு அதிபதியாக நியமிக்கப்பெற்று, அங்குத் தமது தயாளகுணத்தினாலும் படக்ஷான் அதிபதியின் புத்திரியை மணம் புரிந்ததனாலும் ஜனங்களால் அபிமானிக்கப்பெற்றனர். பின்பு 1868-ம் வருஷத்தில் தமது தாயாதியாகிய யாகுப்கானோடு சண்டைசெய்ய ஆற்றாமல் தோற்றுப்போய், ராஜ்யத்தைவிட்டு ஓடி உருஷிய நாட்டில் தப்புவித்துக்கொள்ள வேண்டியதாயிற்று. அங்கு உருஷியருடைய ஆதரணையிற் சிறிதுகாலமிருந்து, பின்பு 1879-ம் வருஷத்தில், தம் தேசத்துக்கு மீண்டுவந்து, காபூல் நாட்டுக்கு அமீராக நியமிக்கப் பெற்றனர். அக்காலத்தில் இந்தியா துரைத்தனத்தாரும் அந்நியமனத்தை ஒப்புக்கொண்டனர். இவர், தாம் அமீரானது முதல் பிரிட்டிஷ் துரைத்தனத்தாரோடு மற்றத் துரைத்தனத்தார் எவர்களிலும் அதிக நட்புப்பூண்டு இருந்துவந்தனர். இவர் சண்டை சச்சரவுகளை அடக்கித் திருட்டுமுதலிய தீங்குகளை நீக்கி, வெகு கடுமையாயும் நேர்மையாயும் ராஜ்யத்தை ஆண்டுவந்தனர். இவர் காலத்தில் கொல்புலியினும் கொடியகள்வர்களால் ஆறலைக்கப்படும் பயங்கரமான கணவாய்களில் திருட்டுப் பயமேயில்லாமல் நீங்கிப்போயிற்று. விலையுயர்ந்த நகை நாணயங்களைக்கொண்டு, யாதும் பயமில்லாமல், ஐரோப்பியப் பிரயாணிகளுக்குப் பிரயாணம் செய்யும்படியாயிருந்தது. இவர் பிரிட்டிஷ் துரைத்தனத்தாரால்

வருஷம் ஒன்றுக்கு இலக்ஷத்தறுபதினாயிரம் பவுன் திரவிய உதவிபெற்று இன்னும் தமது படைகளைப் பலப்படுத்தும்பொருட்டு அநேக ஆயுதங்களையும் பெற்றுவந்தனர். இவருக்கு உருஷியரிடத்தைப்பார்க்க அங்கிலேயரிடத்தே அபிமானம் அதிகம். 1893-ம் வருஷத்தில் அபாயமான கொடிய வியாதியிலிருந்து பகவத்கடாக்ஷத்தினால் தப்பிப்பிழைத்தனர். இவரை நமது மகாராணியார் இங்கிலாந்துக்கு ஒருநடை வந்துபோகவேண்டும் என்றழைக்க, அப்போது தமக்குப்போதல் சாத்யமில்லாதிருந்ததனால், தமது இரண்டாவது குமாரராகிய, ஷாஸ்டா நாஸரல்லாகான் என்பவரை அனுப்பினர். அவரும் மகாராணியவர்களால் வெகு ஆதரவோடும் உபசரிக்கப்பட்டனர். இவருக்குப்பின் இப்போது இவரது மூத்த குமாரராகிய ஹாபிபல்லாகான் என்பவர் அமீர் பட்டத்துக்கு வந்திருக்கின்றனர்.

## பூர்வீக ஆரியர்களின் இல்லற வாழ்க்கை.

(141-வது பக்கத் தொடர்ச்சி.)

8-வதுமண்டலத்தில் பின்வருமாறு துதிசெய்ததாகக்கூறுகின்றது "ஓ தேவதைகாள் யான் இல்லறத்துணைவியோடு ஆகுதிசெய்யும் பால்கலந்த சோம ரசத்தை உட்கொண்டு எங்களுக்கு சகல சம்பத்துக்களையுந்தந்து ஆசீர்வதிக்கப் பிரார்த்திக்கின்றோம்." ஸ்திரீகளும் மனிதர்களைப்போலவே கற்றும் யாகாதிகளைச்செய்தும் வந்தார்கள். அவர்கள் படிக்கக்கூடாதென்பதும் தனிமையாயிருக்கவேண்டுமென்றும், மனிதர்களோடு கலந்திருக்கக்கூடாதென்றும், இன்னும் இவை போன்ற நிர்ப்பந்தங்கள் முன்பு கிடையாது. முகத்தில் திரைபோட்ட ஸ்திரீகள் இருந்ததாக சொல்லியிருக்கிறதேயொழிய அவர்கள் அந்தரங்க வாசிகளாக இருந்ததாகக் காணோம். ஐந்தாவது மண்டலத்தில் (விஸ்வாவரா) "விஸ்வாஹரா" (Viswavara) என்ற ஒரு ஸ்திரீரத்னம் இருந்ததாகவும் அவள் தன் கவிபாடுந் திறமையால் அநேகமந்திரங்களை தானாகவே செய்து அக்கினியை வளர்த்தி யாகஞ்செய்து இல்லறவாழ்க்கை அனுசரிப்போர் வழிபிசகி நடவாமாறு பிரார்த்தனை செய்ததாக சொல்லப்பட்டிருக்கிறது. இதே மாதிரியாய் ஸ்திரீகளில் அனேகர் இருஷிகளாக இருந்திருக்கிறார்கள். ஐனோபகாரமான விஷயங்களை அனுசரித்துக்கொண்டு சுகமாக வாழ்நாட்களைக் கழித்தார்கள். இப்போது நிர்ப்பந்தத்தின் மேல் செய்யவேண்டிய கருமங்கள் பல உள. பெண்கள் எல்லாரும் கலியாணம் செய்துகொள்ளவேண்டுமென்றவிதி முன்பு கிடையாது. கல்யாணம் இன்றிஸ்திரீகள் தங்கள் பிதாக்களிடம் இருந்துகொண்டு சொத்துக்களுக்கு உரியவர்களானதாக இரண்டாவது மண்டலத்தில் சொல்லியிருக்கின்றன. இல்லற ஒழுக்கத்தைப் பிசகி நடந்த பெண்டுகளைப் பற்றியும், கற்புநிலைமையைக் காக்க சகோதரர்கள் கிடையாத குடும்பங்களைப்பற்றியும், தங்கள புருஷர்களுக்கு ஒத்துவராதபெண்டீர்களைப்பற்றியும், சூதாடும ஆடவர்களின் மனைவிகளைப் பிறர் அபகரித்ததைப்பற்றியும், 2, 4, 10 வது மண்டலங்களில் கூறப்பட்டிருக்கின்றன. பெண்கள் தங்களுக்கேற்ற புருஷர்களை விவாகம்செய்து கொள்ள சிறிது இடங்கொடுக்கப்பட்டிருந்ததால் தங்கள் மனதுக்கேற்றவர்களை தெரிந்தெடுத்துக்கொண்டார்கள். தகப்பனார்கள் தங்கள் பெண்களை அலங்காரம்செய்து தக்கவர்களைப்பார்த்து கன்னிகாதானமும் செய்வதுண்டு. விவாக சமயத்தில் ஆண், பெண் ஒருவரைப்பார்த்து ஒருவர் செய்துகொள்ளும் பலவிதவாக்கு தத்தங்களில் முக்கியமாய் இரண்டு யாதெனில்:

1. "ஓ கல்யாணக்கடவுளே! இங்குமுகூர்த்தம் நடந்தாயிற்று. உம்மை நாங்கள் பூசை செய்தாயிற்று. தகுந்தவயதாக தகப்பனாரிடத்தில் வளரும் வேறேதாவது பெண்ணிருந்தால் அங்கே விரைந்துசெல்வீர்."

2. "ஓவிஸ்வாவசுவே! நாங்கள் உம்மை நமஸ்கரித்து பூசைசெய்கிறோம். தக்கபக்குவமடைந்து விவாகமில்லாதவளிடம் போய் கணவனைத் தேடிக்கொடுக்க இவ்விடம்விட்டு எழுந்தருளும்." இதனால்பக்குவமடைந்தபெண்களுக்கு விவாகம் நடந்ததாக ஏற்படுகிறது. ஆகவே தற்காலத்தில் நடத்திவரும் பால்ய விவாகங்களுக்கு ஆதாரமில்லை. வேதத்தின் கடைசி காண்டத்தில் அரசர்களும், பணக்காரர்களும் பல பெண்களை விவாகம் செய்து கொள்ளலாமென்றிருப்பதால் அப்படி சிலர் செய்துகொண்டு தங்கள் இல்லறத்தில் எப்போதும்பலவித சங்கடங்கள்உண்டாகிசக்களத்திப் போர் நடந்ததாக வெளியாகின்றது. இந்த வழக்கம் பிந்தியதே யொழிய முந்திய மந்திரங்களில் கிடையாது. இதேகாலத்தில் சட்டநிரூபணம்செய்தற் காதாரமான இரண்டு ஸ்லோகம் ஏற்பட்டன, அவையாதெனில்:—

1. ஆண்சந்ததி இல்லாதவொருவன் தன் சொத்தை பெண் வயிற்றுப் பேரனுக்குகொடுத்து தன் ஜீவகாலம்வரையில் அவனிடமே இருந்து காலங்கழிக்கிறான்.

2. ஒருவன் தன்தகப்பனிடமிருந்து பெற்ற சொத்தை தன்னோடு பிறந்த சகோதரிகளுக்கு கொடுப்பது கிடையாது. ஆனால் அவளுக்கு கல்யாணம்செய்து வைப்பது உண்டு. ஒருவனுக்கு ஆணும் பெண்ணும் பிறந்தால் மகன் தான் சொத்துமுதலியவற்றிற்கு பாத்திரனாகி வீட்டில் மகள் மரியாதைக்கு மாத்திரம் உரியவளாகிறாள். இந்த ஆதாரத்தையே கொண்டு பிற்காலத்தவர்கள் தந்தை சொத்துக்கு மகன் தான் உரியவனென்று ஏற்படுத்திக்கொண்டார்கள். ஆண்சந்ததி இல்லாத போது பெண்வயிற்றுப் பேரன்தான் உரியவனென்றும் ஏற்படுத்திக்கொண்டார்கள். தத்து வாங்கிக்கொள்ளும் வழக்கத்திற்கும் இடமிருந்தது.

இனி உத்தரக்கிரியைகளைப் பற்றி ஒருவாறு யோசிப்போம். யமதர்மராஜன் நரகலோகத் ததிபதியல்ல. ஆனால் இருக்கு வேதத்தில் சன்மார்க்கர்போயடைகிற மோக்ஷத்தின் அதிபதியாய் அவர்களுக்கு நல்லலோகம் கொடுத்து காப்பாற்றுகிறவரெனதெரிகின்றது. சடங்குகள் பிரபலமான வேதமுடிவுகாலத்தில் உண்டான சில மந்திரங்களின் கருத்தை அடியிற் கூறுவோம்.

1. "ஓ சவமே! நம் முன்னோர்கள் போன வழியே ஏகுக. யமனும் வருணபகவானும் யான்செய்த அவிர்பாகங்களால் திருப்தியடைந்திருக்கிறார்கள். சுகமான லோகத்திற்குப்போய் உம் முன்னோரோடு சேர்ந்துகொள்வாய். நீசெய்த நற்பயன்களைக் கொண்டு பாவத்தைவிட்டு சற்கதியடைவாய்.

2. "ஓ துஷ்டதேவதைகாள் இந்த இடம் விட்டுப் போங்கள். ஏனெனில் முன்னோர்கள் இந்த சவத்திற்கு ஒருதக்க இடம்பார்த்துவைத்திருக்கிறார்கள். அந்த இடம் சதா பிரகாசமாயும், சந்தோஷகரமுள்ளது. மகான்களுக்காகவே யமனால் நிர்மாணம் பண்ணப்பட்டது.

3. "ஓ சவமே! யமனிடத்திலுள்ள இரண்டு நாய்கள் ஒவ்வொன்றிற்கும் நான்கு கண்களும் அற்புதமான வர்ணமும் உண்டாயிருக்கின்றன. அவைகளை விட்டு தூரச் செல்லு. நல்லவழி தோன்றும். அதின் வழியாகப்போய் யமதர்மராஜனோடு சுகமாயிருக்கும் முன்னோர்களிடம் போய்சேரலாம்."

இதனால் மறுமை சுகத்தைப்பற்றிய தன்மை நம் பிற்காலத்திய முன்னோர்களுக்கு இன்னவிதமாயிருந்ததென விளங்குகின்றது. ஆதிகாலத்தில் பிணத்தைப் புதைத்தும் சுட்டும் வந்ததிற்கு சுலோகங்கள் 10-வது மண்டலத்தில் சொல்லப்பட்டிருக்கின்றன. விதவைகள் புனர் விவாகம் செய்துகொண்டார்களென்பது பின் வரும் மந்திரத்தால் தெரிகின்றது.

"ஓ ஸ்திரீயே! உன் இறந்துபோன கணவனைவிட்டு உலகவாழ்க்கைக்கு திரும்பிவந்து

உன்னை வரிப்போனை கல்யாணம் செய்து கொள்."

மேலேகுறித்த விஷயத்தை சாயனுசாரியர் தைத்தியாருண்ணியகத்தில் குறிப்பிட்டிருக்கிறுர். இந்தியாவின் உத்தரகிரியைகளைப்பற்றி எழுதிய "D. K. Rajendra Lala Mitra என்பவர் பின்வருமாறு வேதத்தில் புனர்விவாகம் செய்ய ஆதாரமிருக்கிறதென சொல்லியிருக்கிறுர். சம்ஸ்கிருத பாஷையில் ஆதிகாலந் தொடங்கி வழிங்கிவரும், "Didhishu" 'திதிஷு'' என்ற பதத்தாலும், இரண்டாவது, கல்யாணம் செய்துகொண்ட ஸ்திரீ என்பதற்கு "பரபூர்வ" என்ற வார்த்தையாலும், இரண்டாம் புருஷனிடத்தில் ஜனித்த புத்திரன் என்று பொருள்படும "பவுனர்ப்பவா" என்ற பதத்தாலும் முந்தி விதவவிவாகம் உண்டாயிருக்கவேண்டுமென்று வற்புரித்தி கூறியிருக்கின்றுர். உடன்கட்டையேறும் கொடிய வழக்கத்திற்கு சிறிதேனும் இடமில்லை. பிற்காலத்தவர்கள் ஒரு பதச்சேதத்தால் விபரீத வியாக்கியானம்செய்து கொடிய கிருத்தியங்களுக்கு இடங் காட்டிக்கொடுத்து அந்தோ! அநியாயமாய் அனேக உயிர்களை மடியச்செய்த பாவம் இவர்களைவிட்டுத் தொலையாதென்று சில பெரியோர்கள் வெகு உருக்கத்துடன் சொல்லியிருக்கிறுர்கள்.

எ. சே. சிவராம அய்யர்.

---

ALFRED THE GREAT.

## ஆல்பிரட் மஹாராஜாவின் சரித்திரம்.

இவ்வரசர் இன்றைக்குச் சரியாக ஆயிரம் வருடங்களுக்கு முன்னே இங்கிலாந்து தேசத்தில் பெருமையோடு அரசு செலுத்தினவர். காலம் சென்று இப்போது ஆயிரம் வருடமாகின்றபடியால் அந்நாட்டார் இவரது ஞாபகார்த்தமாக அந்நாட்டுக்குப்பழைய இராஜதானியாயிருந்த வின்செஸ்டர் என்னும் நகரில் ஒரு சிலாவிக்ரகம் பிரதிஷ்டை செய்து உற்சவம் கொண்டாட உத்தேசித்து அவ்வுற்சவத்துக்குத்தக்க முயற்சியைச்செய்து வருகின்றுர்கள். இச்சமயத்தில இவரது சரித்திரத்தையும் குணதிசயங்களையும் எடுத்து விவரித்தல் உசிதமாயிருக்குமென்றெண்ணி இங்கு விவரிக்கலுற்றேன்.

இவ்வரசர் பெருமான் ஒன்பதாம் நூற்றுண்டின் கடையில் அங்கிலேயருக்கு அரசாயிருந்தவர். அக்காலத்து அரசர்களுளெல்லாம் சிறந்தவர். இவர் சிங்காசனம் ஏறியகாலத்தில் தேசத்தில் தேனரென்னும் கொள்ளைக்காரர்களுடைய படையெடுப்பினுலும் போராட்டத்தாலும் கொள்ளைகளாலும் ஜனங்களுக்கு உயிரும் உடைமையும் சாசுவதமின்றி ஏழைகளாகிய குடிகளுக்கேயன்றி செல்வமும் வலிமையும் பெற்ற பிரபுக்களுக்கும் அரசனுக்குங் கூடத் தத்தம் பொருள்களைப் பாதுகாப்பது அரிதாயிருந்தது. அரசர் இப்பகைவரோடு பன்முறை போர் புரிந்தும் வெல்ல முடியாமல், ஒருபொழுது தம் நாடுநகரங்களைத் துறந்து சுற்றங்களையும் சேனைகளையும் பிரிந்து ஒரு நிர்மானுஷியமான காட்டினிடையே ஒன்றியாகி வருத்தமுற்றுப் பசியால் வருந்தி முடிவில் ஆங்கோர் இடையன் கீழ் மாடுமேய்க்கியாய்க் கூலிக்கமர்ந்து வயிறுவளர்க்கவேண்டியதாயிற்று. அந்தோ! அநேகம் பிரபுக்கள் சூழ சொர்ண சிம்ஹாசனத்தில் வீற்றிருந்து பெரும் புவியாண்ட அரசருக்கு வந்த காலகதிதானென்ன! ஆயினும் அவர் 'ஊக்கமுடைமை ஆக்கத்திற்கழகு' என்றபடி ஊக்கத்தைக்கைவிடாமல் இருந்து முடிவில் கடவுளருளால் பகைவரைவென்று அரசை மீண்டு நெடுங்காலம் இரும்புவிகளிக்க வெகு நன்மையாக ஆண்டிருந்து என்றும் அழியாப் பெரும்புகழ் பெற்றனர்.

இனி இவரது குணதிசயங்களை விவரிக்குங்கால்எவ்வளவு இனிமையாயிருக்கும். இவர் செய்துள்ள செய்கைகளில் அயோக்கியமா

னது ஒன்றேனும் காண்பதரிது. இவரது நிர்மலமாகிய கீர்த்தியில் ஒரு மறுவேனும் நாம் காண முடியாது. வீரம் ஞானம் நன்மை தூய்மை யென்னும் இக்குணங்களையே இவர் பெற்றிருந்தனர். தமது காலத்தை எள்ளளவேனும் வீணிற்கழிக்கமனம் பொறாதவர். அக்காலத்தில் கடியாரமாவது வேறே நாழிகை அறிந்து கொள்ளக் கூடியகருவிகளாவது இல்லை. பகல் காலத்தில் சூரியன் கண்ணுக்குத்தெரியுமாயின் அதன் நிலையைக்கண்டு பொழுது தெரிந்து கொள்வார்கள். வானம் மப்புமூடிச் சூரிய ரஸ்மி காணாத போது பொழுதை ஒருவாறு ஊகித்துக்கொள்ளவேண்டியது தான். ஆதலால் இவர் நாழிகை கிருத்தியமாகத் தெரியும் பொருட்டு ஓர் உபாயம் செய்தனர். அதாவது விளக்கெரிக்கும் மெழுகை நிறுத்து அதில் ஒரு திரியை ஏற்றிவைத்து அது எத்தனை நாழிகை எரியுமென்று கணக்குப்படுத்திக் கொண்டு அவ்விதமாக மெழுகுவத்திகளால் பகலிலும் இரவிலும் பொழுது தெரிந்து கொண்டு அப்பொழுதில் ஒருக்ஷணமாத்திரமாவது வீண்போக்காமல் தம் காரியங்களைச் செய்துவந்தனர். இவர் யாதேனும் ஓர் காரியத்தைச்செய்ய மேற்கொண்டால் தம்மால் கூடினவளவில் உழைத்துச்செய்வார். ஒரு காரியம் தமது சக்தியை மீறினதாயின் அதனை முற்றும் அதைரியப்பட்டு விட்டுவிடாமல் இயன்றவளவில் செவ்வையாகச் செய்து முடிப்பார். அற்பமென்று ஒருகாரியத்தையும் இகழ்ந்துவிடார். உயுத்தத்தில் பராக்கிரமும் திறமையுமுடையவர். தேனர்களோடு ஒரு வருஷத்தில் ஒன்பது பெரிய போர்புரிந்திருக்கிறார். சேனைகளைச் செலுத்துவதில் மிகவும் வல்லவர். இவரது படைகளுக்கு இவரது சாமர்த்தியக்குறைவினால் அபஜயம் நேரிடுமென்னும் சஞ்சலமேயில்லை. ஒவ்வொருகாரியமும் தமது கண்ணாரப்பார்த்துச் செவ்வையாகச் செய்விப்பது இவர் சுபாவம். அந்நாளில் ஆகாரம் தேடுதற்கின்றியமையாத வேட்டை நாய்களை வெகு சாமர்த்தியமாகப்பழக்குவித்தனர். யுத்தத்துக்கு வேண்டிய ஆயுதங்களையும் பாடுதற்குரிய வீணைகளையும் படித்தற்குரிய புத்தகங்களையும் தக்க மனுஷ்யரைக் கொண்டு தம் கண்பார்வையிற்றானே செய்விப்பார். இவர் காட்டில் மாடுமேய்ப்பானாகவிருந்த காலத்தில் தம்மெஜமானன் மனைவி அடுப்பில் வேகும் அப்பங்களைக் காந்திப்போகாமல் பார்த்துக்கொள்ளென்று கட்டளையிட டனளென்றும் இவர் ஏதோ ஆழ்ந்த ஆலோசனைமேலிருந்ததினாலே அவற்றைப்பாராது கருகவிட்டனரென்றும் எஜமானி வந்து இவரைக்கோபித்திடித்தனளென்றும் ஒரு கதையுண்டு. இக்கதை முற்றும் உண்மையென்று தோற்றவில்லை. இவர் புத்தி பூர்வமாகத் தமது அசாக்கிரதையாலே அவற்றைக் கருகவிட்டனரென்று சொல்லுதல் கூடாது. அவை தம் கண்மறைவில் இருந்ததனாலோ அல்லது அவ்விஷயம் தமக்குத் தெரியாமையினாலோ செய்திருக்கலாம்.

இவர் தமது குடும்பத்தை வெகுசெம்மையாக நடத்தினவர். தமது மக்கள் ஒவ்வொருவருக்கும் தெய்வபத்தியைப்போதித்து மேலால் இவ்வுலகத்துக்குப் பயன் தரக்கூடிய சத்காரியங்களைக் குறைவறச்செய்து முடித்தற்குச் சாதகமானவற்றையும் போதித்தனர். இன்னம் சிறிது காலத்துக்கெல்லாம் அவர்கள் பிள்ளைப்பருவம் நீங்கிப் பெரியோர்கள் ஆவார்களென்றும் அதனால் அடிமுதலாகவே இம்மைக்கும் மறுமைக்கும் உரியவற்றைச் செய்து முடிக்கத் திறமையுண்டாகும்படிச் செவ்வையாகக் கற்பிக்கவேண்டுமென்றும் நன்றாயறிந்தவர்.

இவர் தம் குடிகளுக்கு அநேகசட்டங்களை ஏற்படுத்தினர். அச்சட்டங்கள் முற்றிலும் இவரே உண்டுபண்ணினவைகள் அல்ல. முன்னோர்கள் ஏற்படுத்தினவற்றில் தெரிந்துகொள்ளப்பட்டவை. அச்சட்டங்களுக்குத் தலையில் கடவுளது சட்டங்களை வைத்துத் தாம் கொடுத்த சட்டங்களெல்லாம் கடவுளின் சட்டங்களினாலுண்டானவை யென்பதை விளக்கி

ணர் தாம் செய்யும் ஒவ்வொரு காரியத்திலும் கடவுள் துணையை நாடிச்செய்வார்.

இவ்வளவுகாரியமும் செய்த இவர் எவ்வளவு தேகபலமும் திடகாத்திரமும் பெற்றிருந்தாரோ வென்று நீங்கள் மயங்கவேண்டாம். நல்லமரத்தில் புல்லுருவி முளைத்ததாமென்று இவருக்குத் தீராக் கொடியநோயொன்றிருந்தது. அதனால் இவர் சிலசமயங்களில் இவ்வளவு அவ்வளவு அல்லவென்று அவஸ்தைப்படுவார். ஆயினும் அவ்வளவும்பொறுத்துத் தமக்குரிய கடமைகளைக் குறைவற நிறைவேற்றி வந்தனர்.

இவர் தெய்வபத்தியில் மிகச்சிறந்தவர். வேதபுஸ்தகத்தை விடாமல் அநுசந்தித்து அதில் கூறிய உபதேசங்களை மறவாது கைக்கொண்டு தமக்கு மனோவியாகுலம் வந்த காலத்தில் அவற்றையுணர்ந்து ஆறுதலடைவார். இவர் பெருமையும் அறிவும் சிறந்த அரசர் என்பதில் ஐயமில்லை. இவர் நன்மையும் உண்மையும் உடைய பெரியவர் என்பதும் விளங்குவதே. இவர்பால் இளைஞர், முதியர், செல்வர், வறிஞர், மேலோர், கீழோர் ஆகிய ஒவ்வொருவரும் அநேக நன்மைகளைக் கற்றுக்கொள்ளலாம்.

### *Man—Apparent & Real.*

### மனிதனது ஜடஜீவபாகங்கள்.

மனிதனது ஜட பாகம் இந்ததேகம். ஜீவபாகம் ஆத்மா. நமது தேகத்தை அதிநுட்பமாகப் பிரித்து ஆராய்ந்து பார்த்தால் ஓரணுச்சீவனுகிய அமீபாவை யொத்த அனேகம் 'ஸெல்கள்' சேர்ந்துண்டானதென்று விளங்கும். இந்த 'ஸெலகள்' பல முறையே சேர்ந்தால் சரிகையிழைபோன்ற 'டிஷ்யு' ஆகிறது. இதனால் தோல் நரம்பு மாமிசம் முதலியவை உண்டாகின்றன. இவை தானாக வேலைசெய்யும் கருவிகள் உறுப்புகளாகின்றன. இந்த உறுப்புகள் பல சேர்ந்தது உடலாகின்றது. மனிதன் சரீரம் வாத்தியப்பெட்டிபோலும் ரயிலவே இஞ்சின்போலும் அதியற்புதமான ஒரு யந்திரமன்றி வேறல்ல. இந்த யந்திரத்தை இயக்குவது பிராணன். பிராணனுக்காதாரம் ஆத்மா. ஆத்மா என்பது ஸர்வவியாபகமாய் ஆகாசம்போல் எங்கும் பரவியுள்ள அழியாத ஆதியநாதியற்ற நித்தியவஸ்து. இந்த மனுஷதேகம் பூச்சி புழு மிருகம் முதலியவற்றின் தேகத்தைவிட மிக நுட்பமாகவும் சிக்குமுக்காகவும் உறுப்புகள் அமையப்பெற்று அதியற்புதமாக ஒழுங்காய் வேலைசெய்துவரும் யந்திரமேயன்றி வேறல்ல. சிருஷ்டிவர்க்கங்களில் மனித தேகம் மிகவும் அற்புதமாக அமைக்கப்பட்ட உறுப்புகளின் கூட்டமே யன்றி வேறல்ல. சரீரத்தினுடைய தொழிலைமட்டும் பார்த்தால் அமீபாவுக்கும் மனிதசரீரத்துக்கும் வித்தியாசமில்லை. அதுவும் ஆகாரத்தையுட்கொள்ளல், உட்கொண்ட ஆகாரத்தை தன்மயமாக்கிக்கொள்ளல், மிகுந்ததை வெளித்தள்ளல், தற்பிரவர்த்தியல்லது தன்னை யொத்த வேறு சரீரத்தை உற்பத்திசெய்யல், ஆகிய பிரதானமான தொழில்கள் இரண்டுக்கும் ஒன்றே. அத்தொழில்களை யியற்றும் வகையிலும், தேக உறுப்புகளின் விசேஷ அமைப்பு இயல்பு இவற்றிலும் மிக்க பேதமுண்டு. மனித சரீரத்திலுண்டாயுள்ள உறுப்புகள் எல்லாவற்றிலும், மூளைநரம்புகள் மிக அற்புதமானவை. அமீபாவுக்கும் மனுஷதேகத்துக்குமுள்ள வித்தியாசம், காட்டில் மூலைக்கொருவராய் வசிக்கும் குறவர் குடிசைகளுக்கும், நாகரிக மிகுந்த ஒரு பெரிய இராஜதானிப்பட்டினத்துக்கு முள்ள வித்தியாசத்தையொத்ததென்று சொல்லலாம். மனுஷதேகம் வளருவதற்கு வேண்டிய வேலைகளெல்லாம் ஆகாரவழி (Alimentary canal) யிலுள்ள உறுப்புகளால் நடத்தப்படுகின்றன. நாம் குழந்தையாயிருக்கும்பொழுது ஆகாரவழி தேகப்பிரமாணத்துக்கு மேலான அளவும் சக்தியுமுள்ளதாக விருப்பதால், அது அதிகமாய் ஆகாரத்தையுட்கொண்டு தேகத்திற்கு மிகுந்த புஷ்டியைக் கொடுக்கிறது.

சுமார் 25-வருஷத்தில் தேகம் இந்த அதிக புஷ்டியைக்கொண்டு விசேஷமாக வளர்ந்து வருகிறது. அப்புறம் இரைப்பை முதலிய வற்றால் தயார் செய்யப்படும் போஷணசத்து தேகத்திலுண்டாகும் நஷ்டத்தை யீடுகட்டு வதற்குமட்டும் போதுமாயிருக்கிறதே யன்றி அதற்குமேல் மிஞ்சுகிறதில்லை. ஆகையால் வளர்ச்சியும் அந்த வயதோடு நின்றுவிடுகிறது. அது எப்படியென்றால், குறித்த ஒரு பாரம் இழுப்பதற்காகச் செய்யப்பட்ட யந்திரம் அந்த அளவுவரையில் எவ்வளவு பாரம் ஏற்றி னாலும் இலகுவாக இழுத்து, அந்த நிறை எட் டினபிற்பாடு மேல்பார மிழுக்க சக்தியில்லாமல் அவ்வளவோடு நிற்கிறதுபோல, ஆகாரவழி யில் தயாராகும் போஷணசத்து எவ்வளவு இடை யல்லது பருமனுள்ள தேகத்தைப் போஷிக்கக்கூடுமோ அவ்வளவுக்கு தேகம் வளர்ந்ததும் மேல்வளர்ச்சியின்றி நின்றுபோ கின்றது. பிறகு வேலை செய்யச்செய்ய இந்த உறுப்புகள் தேய்வு அழிவினால் பலவீனப்பட்டு வரும்பொழுது தேகமும் போஷணசத்தின்றி பலவீனப்படுகிறது. இதற்குத்தான் மூப்பு என்றும் கிழத்தனமென்றும் பேர். இடையே எந்த உறுப்புகள் மிதமிஞ்சி வேலைசெய்ததால் அதிகமாக இளைத்துக் களைத்திருக்கின்ற வோ அவை தேகம் வலுக்குறைய ஆரம்பிக் கும்பொழுது முன்னதாகக் கோளாறுபட்டுக் கெட்டுப்போகின்றன. இதனால் அந்த உறுப் பைப்பற்றின வியாதிவருகிறது. தேகத்தி லுள்ள முக்கிய உறுப்புகளெல்லாம் ஒன்றோ டொன்று ஒத்துழைத்தாலன்றி தேகபோ ஷணை சரியாக நிறைவேறுவதில்லை யாதலால் ஒரு முக்கிய உறுப்புக்குப் பாதகம் நேர்ந்தால் அந்த அளவுக்கு மற்ற உறுப்புகளும் பாதிக்கப் படுகின்றன. இப்படிப்பட்ட உறுப்புச் சேதம் ஒன்றும் நேரிடாமல் எல்லா உறுப்புகளும் சமரசநிலையிலிருந்துழைத்து வந்தால் அப்பொ ழுது அந்த தேகம் வார்த்திபதசையினால் அதாவது இயல்பாக தேகவலுக் குறைந்து வருவதனால் தானே உறுப்புகளொடுங்கிக் கடைசியில் தேக போஷணைக்கு வேண்டிய சத்துத் தயார்செய்ய முடியாமையால் ஓய்ந்து உட்கார்ந்து போகின்றது. இதற்குத்தான் மர ணம் என்று சொல்கிறது.

இந்த தேகம் விழுந்துபோவதால் மனித னும் அழிந்துபோய் விடுகிறானென்று சொல் வது சுத்தப்பிசகு. உண்மையான மனிதன் இந்ததேகமல்ல, காற்றல்ல; ஆனால் பரமாத் மாவின் அம்சமாகிய ஜீவன். "தேஹோ தேவாலய ப்ரோக்த : ஸஜீவக் கேவல சிவ :" என்பது சுருதிவாக்கியம். இந்ததேகம் தேவா லயம் என்று சொல்லப்படுகிறது. அதிலுள்ள ஜீவனனவன் சிவனே யென்று மைத்திரே யோபநிஷத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. யேசுகிறிஸ்துவும் இப்படியே போதித்திருக் கிறார்—அவருடைய தேகத்தை தேவாலய மென்றும், அதற்குள்ளிருக்கிற ஜீவாத்மாவே தேவபுத்திர னென்றும், அந்த ஜீவாத்மா வும் பரமாத்மாவும் ஒன்று என்றும் அவர் மிகத்துல்லியமாகப் போதித்திருக்கிறார். இந்த ஜீவன் தேகத்திலிருந்து இதை ஆட்டிவைத் தாலும், தேகத்தோடு சம்பந்தப்பட்டதில்லை யென்று உண்மையறிந்தவர்களெல்லாம் தங்க ளுடைய சொந்த அனுபவத்திலிருந்து கண்டு போதித்திருக்கிறார்கள். இக்காலத்து டாக்டர் களும் இதை யொப்புக்கொள்ளவேண்டியிருக் கிறதென்பதை அவர்களில் அனேகர் பரீக்ஷை செய்து பார்த்துக் கூறின வசனங்களிலிருந்து ஹெரல்ட் என்னும் வைத்திய சாஸ்திரப்பத்திரி கையில் ஒருவர் நிரூபித்திருக்கிறார். இந்தியா வில் ஹடயோகிகள் தேகமே ஆத்மாவென் கிற தப்பெண்ணத்தை விடமாட்டாமல் குரு முகமாய் அனேக பிரயத்தினங்கள் செய்து மயக்கவஸ்துக்களைத் தின்று அப்போது வரும் போதையில் அவர்கள் தேகம் ஜடமாகக்கிடந் தாலும் உள்ளூர ஒருவித ஆனந்தம் அனுபவிக் கிறதைக்கொண்டு ஆத்மா தேக சம்பந்தப் பட்டதன்று என்னும் திடஞானம் சித்திக்கப் பிரயத்தனப்படுவதுண்டு. வைத்தியர்கள் சிகிச்சையார்த்தம் கொடுக்கும் மயக்க மருந்

தில், இந்திரியங்கள் ஒடுங்கி, மரணகாலத்தில் நேரிடுகிறதுபோல் தேகம் ஒடுங்கும்பொழுது அவர்களுடைய ஜீவன் அந்ததேகத்தை விட்டு வெளிப்பட்டுநின்று அனுபவித்த அனுபவங்களைக்கொண்டு "நான்" என்பது தேகமல்லாது, அதற்கு வேறாயுள்ள ஜீவனே யென்று ஒப்புக்கொள்ளவேண்டியதாயிருக்கிற தென்று எழுதி யிருக்கிறார்கள்.

---

MASULIPATAM.

## பந்தர் அல்லது மசூலிபட்டணம்.

(பந்தர் நகர்வாசி எழுதியது.)

---

பந்தர் என்பது கிருஷ்ணா ஜில்லாவுக்குத் தலைநகராகிய ஓர் பட்டணம். பந்தர் என்னும் பெயருக்குத் துறைமுகம் என்பது பொருள். இது தற்காலத்திலும் முற்காலத்தில் வர்த்தகவியாபாரங்களிற் சிறந்து முக்கியமான துறைமுகமாயிருந்ததாதலின் இப்பெயர் பெற்றதுபோலும். இந்நகருக்கு மசூலிபட்டணம் என்று இன்னொரு பெயரும் சர்க்கார் நடவடிக்கைகளில் வழங்கிவருகின்றது. இப்பெயருக்குக் காரணம் விசதமாகத் தெரியவில்லை. சிலர் இவ்வூரை இவ்விரு பெயரையும் சேர்த்து மசிலி பந்தர் என்றும் வழங்குவர். இங்கிருந்த கோட்டையில் முன்னம் ஒரு பெரிய மீன்கண் வாயிலாக வைக்கப்பட்டிருந்ததென்றும் அதனால் மசிலி (மீன்கண்) பந்தர் என்னும் பெயர் வந்ததென்றும் சொல்லுவார்கள்.

இது சென்னைபுரிக்கும் காக்கிநாடாவுக்கும் மத்தியில் உள்ள துறைமுகங்களில் முக்கியமானது. நாளுக்குநாள் வளர்பிறைபோலோங்கிவருகின்ற 'பெஜவாடா' என்னும் ரயில் ஜங்க்ஷனிலிருந்து சுமார் 50 மைல் தூரம் நேர்கிழக்காயுள்ளது. இதன் கீழ்ப்புறம் கடல். மற்ற முப்புறங்களும் களர் நிலத்தின் தொடர்ச்சி நீங்கிச்செல்ல விளை வயல்களும் கிராமங்களுமாயிருக்கும். பட்டணத்தைச் சுற்றிலும் முக்கியமாக அதன் வடபுறத்திலும் விசாலமான வெளி நிலங்களும் மைதானங்களும் சவுக்கந்தோப்புகளும் பனந்தோப்புகளுமாயிருக்கும்.

இந்நகர் கடற்றுறையின் கண்ணிருப்பினும் துறையினின்று இரண்டு மூன்று மைல் உள்வீட்டுள்ளது. இது பட்டணமென்று பார்வைக்குப் பசந்தாயிராது. இவ்வூரில் கீழ்மேல் கண்டுபிடிப்பதே மிகவும் பிரயாசம். ஔஸ்திரேலிய ஐரோப்பிய பட்டணங்களைப் போலச் சதுரங்கக்கட்டான் கிழித்ததுபோல அவ்வளவு ஒழுங்காக வீதிகள் அமையாமற்போனாலும், மற்றத் தென்னாடுகளில் உள்ள நகரிகள் போலக்கூட அமைந்ததில்லை. யார் யாருக்கு எங்கெங்கே எப்படி யெப்படி மனமோ அப்படிக்கெல்லாம் வீடுகள் கட்டப்பட்டுள்ளன. இதனால் ஒரு வீட்டின் தலைவை இன்னொரு வீட்டின் வால்நோக்க மகா ஆபாசமாயிருக்கும். அன்றியும் கட்டிடங்களும உருவத்திலாவது வண்ணத்திலாவது சற்றும் சிறந்தவையல்ல. அநேகமாக வீடுகளெல்லாம் ஓடுகள் வேய்ந்து தரையோடு தரையாய் உட்கார்ந்தவைகளே யன்றி ஓங்கியுயர்ந்த உயர்நிலை மாடங்கள் ஒன்றரைகூட அகப்படுவதரிது. தெருவுகளும் கோணிக்குறுகி சந்தும் பொந்துமாகவே யிருக்கும். ஆனாலொன்று: வீடுகள்மட்டும் நெருக்கமில்லாமல் இடையிடையே ஏராளமான காலித்தலங்களுடையனவாயிருக்கும். அதனால் அரோசிகமான அறுவெறுப்புகள் இல்லாமல் தெருவுகள் அநேகமாகச் சுத்தமாயிருக்கும்.

இது பற்பல பேட்டைகளாகப் பிரிக்கப்பட்டுள்ளது. எல்லாமாகப் பதினெட்டுப் பேட்டைகள் உள்ளனவென்பர். இப்பேட்டைகளில் முக்கியமானதும் கடைகண்ணி வர்த்தகம் வியாபாரங்களுக்கு இருப்பிடமாயிருப்பதும் 'ராபர்ட்ஸன் பேட்டை' என்பது. இப்பெயர் இங்கு முன் ஒருகாலத்தில் கலெக்டராயிருந்த

'ராபர்ட்சன்' துரை யவர்கள் பெயரால் வந்தது. இப்பேட்டையின் மத்தியில் ராபர்ட்சன் 'ஸ்கொயர்' என்று சச்சவுக்கமாகி நான்குபுறமும் சப்தப்ராகாரம்போலே ஒன்றினுள் ளொன்றான பல கடைத்தெருவுகளும், மத்தியில் தெப்பக்குளமும் மண்டபமும்போல ஓர் சிறு தடாகமும் தீபஸ்தம்பமும் உள்ளன. இத்தடாகத்துக்கும் கடைச்சிறகுக்கும் இடையே நாற்புறமும் விசாலமாயிருக்கும் ஸ்தலம் குஜிலிக்கடை, அந்திக்கடை, சந்திக்கடை முதலாக அன்றன்றைக்கு வந்துபோகும் நிலைக்கடையில்லாச் சிற்றுக்கடைகளுக்கும் போதுபோக்குக்கும் விநோதங்களுக்கும் ஆஸ்பதமாக அமைந்துள்ளது. இச்சச்சவுக்கம்போல இவ்வளவழகாயும் சுகமாயும் அமைந்தவிடங்கள் வேறெங்குமில்லை யென்பது இவ்வூரார் கொள்கை.

இந்நகரில் முக்கியமான வியாபாரம் நெல், ஆமணக்கு, பருத்தி, புகையிலை முதலிய சாமான்களின் ஏற்றுமதியும், மரங்கள், துணிகள் முதலியவற்றின் இறக்குமதியுமாம். ஜனவரி-பிப்ரவரி மாதங்களில், புது நெல் துவக்கியகாலத்தில், பேட்டையில் வந்திறங்கும் நெல் வண்டிகளை எண்ணி முடியாது. ரோட்டுகளில் வண்டிகள் சாய்வதும் அப்படியே. ஒரு காலையில் எறும்புசாரி வைத்ததுபோல ஒன்றின்பின் ஒன்றாக, ?0 வண்டிகளைத் தொடர்ச்சியாக எண்ணியிருக்கிறேன். இத்தானியங்களை வர்த்தகர் மலிந்தகாலத்தில் வாங்கிப்போட்டுக் குறைந்த காலத்தில் குறைந்த விடங்களுக்கு அனுப்புவார்கள். கைத்தொழில்களில் முக்கியமானது துணிகளுக்குச் சாயம்தோய்த்தல். செஞ்சாயம், கருஞ்சாயங்கள் பளபளப்பாயும் உறுதியாயும் தோய்ப்பார்கள். ஸ்திரீகளேயன்றிப் புருஷர்கள்கூட அநேகமாகச் சாயவஸ்திரம் உடுப்பது வழக்கமாதலினாலும், இவ்வுடை வெளியூர்களுக்கும் நெடுந்தூரம் அனுப்பப்படுதலினாலும், இத்தொழில் இங்கு மிகுதியாகச் செய்யப்பட்டுவருகின்றது. இது தவிரப் பித்தளைப் பாத்திரங்களும், இருப்புக்கருவிகளும், மரவேலைகளும், சிறிது நெசவும் இங்கு செய்யும் கைத்தொழில்களாம். பந்தர் பொடி யென்றும், பந்தர் சட்டி யென்றும், சொல்லப்பட்டவை இங்கு செய்யப்படினும், அவை இங்கு உபயோகிக்கப்படுவதில்லை. ரங்கூன், சிங்கப்பூர் முதலிய பிறதேசங்களுக்கு அனுப்பப்படும். இவை தவிர இவ்வூருக்குச் சமீபத்தில் 5-6 மைலில் உள்ள பெடனை யென்னு மூரில் விசேஷமாகத் துணி நெசவுகளும், மங்கினிப்பூடி யென்னும் இன்னோர் ஊரில் உப்பளங்களும் உள்ளன.

இந்நகரில் முக்கியமான ஜனங்கள் இந்துக்கள். ஆயினும் இது ஒருகாலத்தில் ஐதராபாத் சமஸ்தானத்தின் ஒரு பாகமாகி நபாபொருவன் ஆளுகையில் இருந்தமையால் இங்கு மகம்மதீயரும் விசேஷமாக இருக்கிறார்கள். அவர்களிற் பெரும்பான்மையோர் இந்துக்களிலும் அதிக வறுமையால் வருந்துவோர்கள் என்பது அவரது நலிந்த உடையும், மெலிந்த உருவும், பிற்றற்கு?சுகளுமே தெரிவிக்கும். புஷ்டியானவர் வைசியர்கள் என்பதும் அவர்கள் சதையும், தொந்தியும், நகையும், உடைமையும், மச்சும் மாளிகையுமே தெரிவிக்கும். இவ்வூரார்பேசும் பாஷை தெலுங்கு. இது சென்னபட்டணம் நெல்லூர் முதலிய தென்றிசையிலாவது, கடப்பை பல்லாரி முதலிய மேற்றிசையிலாவது பேசும் தெலுங்கினின்றும் சுவரத்திலும் வார்த்தைகளிலும் வெகுவாக மாறியிருக்கும். இத்தெலுங்கில் அநேக ஹிந்துஸ்தானி வார்த்தைகள் கலந்துள்ளன.

இவ்வூரில் முக்கியமான பாடசாலைகள் இரண்டு. 'நோபில் காலேஜ்' என்னும் கிரிஸ்தவக் கல்விச்சாலை சுமார் அறுபது வருடங்களுக்குமுன் 'ராபர்ட் நோபில்' என்னும் கிரிஸ்தவமத போதகர் ஒருவரால் ஏற்படுத்தப்பட்டு, இப்போது முதல்தரமான காலேஜாய் பி. ஏ. ப்பரிக்ஷைவரையில் கற்பிக்கின்றது.

இதன் கட்டடம் இருதலையும் நீண்டு முன்னிற்கின்ற மேன்மாடங்களும், நடுப்புறத்தில் அகன்று நீண்ட விசாலமாகிய கூடமுமாய் ரம்ப நேர்த்தியாயிருக்கும். இதற்குப் போட்டியாகவும், பாதிரிகள் செய்யும் மத போதனையால் மயங்கிப்போய் வாலிபர் தம் மதம்விட்டுப் பிறமதம் செல்லும் கெடுதியைத்தவிர்க்குமாறும், இந்து மதத்தாரால் ஆதியில் ஏற்படுத்தப்பட்டது 'ஹிந்து ஹைஸ்கூல்' என்பது. ஆயினும் இப்போது மதத்துவேஷமாவது மதாபிமானமாவது ஒன்றையும் காணோம். எப்போதாவது கதாசித் ஒன்று அரை கிரிஸ்தவ மதத்தைச்சேர்ந்தால் அப்போது பத்து நாளைக்கு நிச்சலமான தடாகத்தில் கெடுங்கல்விழுந்து அலைவதுபோல இவ்வைஷய்யாபிமானங்கள் தலையெடுத்து அலைந்து போராடும். பிறகு என்றும்போலப் படுத்துத் தூங்கிவிடும். இஃது எங்குமுள்ள சுபாவமே. நிற்க, இவ்விரண்டு பாடசாலைகள் தவிர மற்றுள்ளனவெல்லாம் இவற்றின் கிளைகளேயாம். படிப்பு ஆண்பாலார் பெண்பாலார் இருதிறத்தாரதும் பாதிரிகள் கையில் தான் உள்ளதென்று சொல்லலாம்.

இவ்வூர் ஜில்லாவுக்குத் தலை நகராதலின், இங்கு பற்பல கச்சேரிகளும், கோர்ட்டுகளும் உள்ளன. கச்சேரிகளும், துரைமக்களின் பங்களாக்களும், பெரும்பாலும் பட்டணத்துக்கு வடபுறத்திலுள்ள மைதானங்களில் அமைந்துள்ளன. கலெக்டர் கச்சேரியும், தாலூகா கச்சேரியும், ஜில்லா கோர்ட்டு, சப்-கோர்ட்டு, முன்சிப் கோர்ட்டு என்னும் மூவகைக் கோர்ட்டுகளும், தந்தியர் ல தபாலாபீஸ் முதலான பற்பல ஆபீசுகளும், ஆசுபத்திரிகளும் இங்குள்ளன.

இவ்வூருக்கு முக்கியமான குறைகள், நிர்மலமான உண்ணீரில்லாமையும், மழை நீருக்குப் போக்கில்லாமையும், ரயில் சம்பந்தமில்லாமையும் ஆகிய இம்மூன்றுமாம். உண்ணீருக்கு கிருஷ்ணா ஜலத்தைக் கால்வாய்வழியே பட்டணத்தின் நடுமையத்துள்ள மேற்கூறிய ரபர்ட்சன் ஸ்கொயர்தடத்தில் கொண்டுவந்துவிட்டு, அங்கு நின்றும் பட்டணத்தின் பற்பல இடங்களுக்கும், பூமி மட்டத்துக்கு 5-6 அடிக்குக்கீழே மண் குழாயூடே கொண்டுசென்று, குண்டுகள் என்னும் கேணிக்குழிகளில் சேர்க்கப்பட்டுள்ளது. இந்நீர் முதலில் கால்வாயிலேயே பலவிதமாக அசுத்தப்பட்டுப், பின்பு பட்டணத்துள்ளும் குழாய்வழியே அசுத்தமாகி, இவ்வூராருக்குச் சுர முதலிய நோய்களுக்கு மூலகாரணமாகி தீராப்பக்ஷம் அநுபவிக்கவேண்டிய தீங்காயிருக்கின்றது. மழை நாளும், இந்நன்னீரென்னும் துர்நீரும் சேர்ந்துவிட்டால், வீட்டுக்கு வீடு சுரமும் படுக்கையுந்தான். கோடைநாளில் குடிக்க நீருக்கு அங்கும் இங்கும் சென்று அலகைபோலப் பறக்கவேண்டும். ரயில் இல்லாமையால் இவ்வூரின் வர்த்தக வியாபாரங்களுக்கும் போக்குவரவுகளுக்கும் மிகவும் இடைஞ்சல். இத்துறையில் ஆறின் வேகத்தால் நெடுந்தூரம் மணல் சென்றடித்துத் தூர்ந்துபோயிருத்தலின் மரக்கலங்கள் கரைக்கு ஏழெட்டு மைலுக்கு அப்புறத்துத்தான் நிற்கவேண்டும்; கிட்டிவரச்சரிப்படாது. தோணிகள்கூட ஏற்றசமயங்களில்தான் கரையோரமாயிருக்கும் மணற்றடைகளைத் தாண்டி கால்வாயுட்புகுந்து இறங்குந் துறைக்கு வரக்கூடும். இவ்வுபத்திரவங்களால் இத்துறையில் வர்த்தகம் முன்போலச் சிறக்காமல் நாளுக்குநாள் க்ஷீணகதி யடைகின்றது. ரயில் இருந்தால் உண்ணாட்டு வியாபாரங்களேனும் ஓங்கி நன்மையடையக்கூடும்.

இந்நகர் வெகு புராதனமான நகர். இங்கு அங்கிலேயர் சென்னைக்கு முன்னே வர்த்தகசாலைகளேற்படுத்தி வியாபாரம் செய்துவந்தனர். அக்காலத்தில் ஐதராபாத்தின அரசனாகிய நிஜாமின் ஆளுகையின் கீழ் ஒரு நபாபால் ஆண்டுவரப்பட்டது. பின்பு 1767-ம் வருஷத்தில் நிஜாமால் அங்கிலேயருக்குப் படைத்துணைப்பொருட்டுக் கொடுக்கப்பட்டது. இது

நெடுங்காலம் ஓர் பெரிய இராணுவத்தான மாயும் சிறந்த துறைமுகமாயும் உயர்வடைந் திருந்தது. பின்பு, 1864-ம் வருஷத்தில் சம்ப வித்த ஒரு பெருவிபத்தால் பெருமையிழந் தது. * ஒருநாளிரவில் மழையும் காற்றும் பிரளயகாலம்போல வீசிக்கொண்டிருக்க திடீரென்று சமுத்திரம் பொங்கிக் கரை கடந்து நெடுந்தூரம்சென்று பட்டணத்திற் பெரும்பான்மையும் விழுங்கிவிட்டு மீண்டு போயிற்று. அன்றிரவில் முப்பதினாயிரம் ஜனங்களும் அளவில்லாத ஆடு, மாடு முத லிய உயிர்க்குலங்களும் அரைக்கணத்தே ஆவி யிழந்தன. ஆ! ஆ! மரணமும் அழிவும் வரும்போது எவ்வளவு விரைவாய் யாரும் கரு தாவண்ணம் எங்கு நின்றோ வந்துவிடுகின்றன! இப்போதுதான் மெல்ல மெல்ல மறுபடியும் தலையெடுக்க ஆரம்பிக்கின்றது. இப்பெருவிபத் தால் ஜனங்களுக்கு உண்டான பீதி இன்னும் போனதில்லை. நவம்பர் மாதத்தில் தீபாவளி சமயம் வந்ததானால் இதோ வந்துவிட்டது, அதோ வந்துவிட்டது என்று பயந்து சாவார் கள். இச்சஞ்சலத்துக் கேற்றாற்போலே இக் கரையோரம் 40′-50′ வரையில் மிகவும் தாழ் மையாகிச் சிற்சில விடங்களில் சமுத்திர மட் டத்துக்கும் தாழ்வாயிருக்கின்றது. ஆயினும் தயாபராராகிய கடவுள் இதனை ஒருகாலன்றி இருகாலழிக்கமாட்டாரென்று நம்பத்தக்கது. இந்தப்புரி நாணாளுமோங்கி நலம்பெற்றுத் தழைக்கக்கடவது.

---

"REMEMBER THY MOTHER."

## "அன்னையை மறவேல்."

அன்னையை மறவே லன்னையை மறவேல் ;
இளமை முதலா யிற்றைநாள் காறும்
நின்னைக் காத்த வன்னையை மறவேல்.
நின்சுக மென்றுந் தன்சுக மென்று,
நீதுய ருறுங்காற் றான்றுய ருழன்று,
கண்ணீர் பெருக்கிக் கவலைமேற் கொள்ளக்
குழவியைக் காமின் குலதெய்வங் காளெனத்
தொழுது வணங்கித் துயரிற் றுடிக்கும்
அன்னையை மறவே லன்னையை மறவேல்.

விளங்குபுன் னகையு மிழலறிய மழலையும்
கண்டுங் கேட்டுங் களித்தவள் மறவேல்.
செல்வ மைந்தன் கல்வியிற் றேர்ந்தான்
என்னச் சான்றோ ரிசைப்பது கேட்பப்
பெற்ற பொழுதினும் பெரிதி னுவகுகும்
நற்றாய் மறவே னற்றாய் மறவேல்.
இம்மையு மறுமையுமென் றெமக் கருளுவன்
எம்மிளங் குமரனென் றிறும்பூ தடையும்
அன்னையை மறவே லன்னையை மறவேல்.

உணவு சுருங்கி யுடல மெலிந்து
நடைதடு மாறி நாமொழி குழறும்
தருணம் வந்தகாற் றாயினை மறவேல்.
பெற்றமனம் புற்றென்பது பிறங்க
குற்றமே செய்யினுங் கொடுமை சொலாதே
வாழையடியின் வாழையைப் போலே
தாழ்வற வென்றும் வாழ்கென வேண்டும்
அன்புரு வாய வன்னையை மறவேல்.

அறுசுவை யார்ந்த வடிசில் பரிமாறி
ஐயா வருந்தினை யருந்தென வூட்டுமிச்
செல்வ மொழியின் திறமுரைப் பரிதால்
அன்னையை மறவே லன்னையை மறவேல்
முன்னறி தெய்வ மாமன்னையை மறவேல்.

எம். எஸ். நடேச அய்யர் பி. ஏ.

---

## HISTORY OF THE POSTAGE STAMP.

## தபால் முத்திரையின் வரலாறு.

தபால் முத்திரைகள் முதல் முதல் இலண்டன் பட்டணத்தில் 1840-ம்௵ ஜனவரி௴ 10௳ யன்று உபயோகிக்கப்பட்டுப் பின்பு ஒன்பது வருஷகாலம் பிரிட்டிஷ் தீவுகளில் மாத்திரமே வழங்கிவந்தன. பிரான்சுதேசத்தில் 1849-ம்௵ ஜனுவரிமாதம் முதற்றேதியிலும், ஜர்மனிதேசத்தில் மறுவருடத்திலும் இவை வழக்கத்தில் வந்தன.

தபால் முத்திரைகள் ஏற்படுதற்குக் காரணமாக ஒரு விசித்திரமான விருத்தாந்தம் உண்டு. சுமார் அறுபது வருஷங்களுக்கு முன் ஒருவர் இங்கிலாந்தின் வடதிசையில் ஓர் மாகாணத்தில் பிரயாணம் செய்ய நேரிட்டது. அவர் ஆங்கோர் சத்திரத்தில் வந்து இறங்கினதும் அவ்விடத்தில் தபாற்கடிதம் ஒன்றைக் கொடுக்கும்படி தபாற்சேவகனும் அச்சமயத்தில் வந்திருந்தனன். சத்திரத்தினின்று அக்கடிதத்தைப் பெற்றுக்கொள்ளும்படி வந்த பெண்பிள்ளை அதைவாங்கி இருபுறமும் திருப்பித்திருப்பிச் சிறிது நேரம் பார்த்துவிட்டுத், தபாற்கூலி ஒரு ஷில்லிங்காதலின் அதைக்கொடுத்து வாங்கிக்கொள்ளப் பணமில்லாமல் மறுபடியும் அவன்கையிலேயே அக்கடிதத்தைக்கொடுத்துவிட்டனள். அக்கடிதம் அவளுக்கு அவள் தமயன் எழுதியது. ஆயினும் என்னசெய்வாள்? பாவம் அதை வாங்கிக்கொள்ள நிர்வாகமில்லாததனால் கொடுத்துவிட வேண்டியதாயிற்று.

அது கண்டு தயாளகுணமுடைய அப்பிரயாணிகர் அக்கூலியைத் தம்கையிலிருந்து கொடுத்து கடிதத்தை அவளுக்கு வாங்கிக் கொடுத்தனர். பின்பு தபாற்காரன் தலைமறைந்ததும், அப்பெண் அப்பிரயாணிகரோடு, "ஐயா நீரேன் கைப்பணம் இழக்கவேண்டும்? இக்கடிதத்தின் வெளிப்புறத்திற் குறித்திருக்கும் சில அடையாளங்களால் அறியவேண்டிய சமாசாரம் யாவும் அப்போதே அறிந்துகொண்

டேனே!" என்று சொல்லித் தானும் தன் தமயனும் பணச்செலவில்லாமல காரியம் முடித்துக்கொள்ளும்படித் தமக்குள்ளேற்படுத்திக் கொண்ட ஓர் ஏற்பாடதுவென்றும், அக்கடிதத்தினுள்ளே ஓரக்ஷரமேனும் எழுதப்படவில்லையென்றும் தன் ரகஸ்யத்தைச் சொல்லி விட்டாள்.

பின்பு அப்பிரயாணகர் யதாப்பிரகாரம் பிரயாணம் போகையில், இவ்விதமான ஏமாற்றங்களுக்கிடங்கொடுக்கும் ஏற்பாடொன்று கெடுதியானதல்லவா வென்று தமக்குத்தாமே ஆலோசிக்கலானார். இவர் தான் 'ரோலண்ட் ஹில்' என்பவர், இவர் இவ்விஷயத்தைப்பற்றிப் பின்னும் ஆலோசிக்கையில், இங்கிலாந்து தேசத்தில் பந்து மித்திரக்கட்டுகள் நெருங்கியிருப்பதினாலும், வர்த்தகவியாபாரங்களுக்கு எல்லையில்லாமையினாலும், கடிதப்பெருக்கத்துக்குத் தடையாய் நிற்பது அதிகமான தபாற் கூலியே என்றும், அக்கூலியைக்குறைத்துவிட்டால் ஜனங்களுக்கு மிக உபகாரமாயிருக்குமாயினும் துரைத்தனத்தாருக்கு அதனால் வரும்படிக் குறைவு நேராதென்றும் அவருக்கு உறுதியாகத்தோன்றியது.

இவர் கொண்ட இக்கொள்கைகள் எல்லாம் பின்னர் துரைத்தனத்தாரால் அங்கீகரிக்கப்பட்டுச் சட்டமாகி, மேலே கூறிய காலம் முதலாக பிரிட்டிஷ் தீவுகள் முழுதும் கடிதங்கள் ஒரு பென்னிக்கு அதாவது ஓர் அணுவுக்குச் சென்றுவருகின்றன. இந்தத் துணிகரமான ஏற்பாட்டால் துரைத்தனத்தாருக்குத் தாம் கருதியபடினும் அதி க்கிரத்தில் அதிக லாபமுண்டாயிற்று. பத்துவருடத்துக்குள் கடிதங்களின் தொகை ஐந்து மடங்கு அதிகரித்தது. ரோலண்டு ஹில்லென்பவர் இங்கிலாந்தின் 'போஸ்டுமாஸ்டர் ஜனரல்' என்னும் தபால் இலாகாவின் சர்வாதிகாரிக்குக் காரியதரிசியாக நியமிக்கப்பெற்று, அங்கிலைமையில் தம்மால் முதல் முதல் ஆலோசிக்கப்பட்ட ஏற்பாடுகளைப் பரிபூர்த்தி செய்து மிக்க உதவி புரிந்தனர். இவ்வேற்பாடுகளை இப்போது நாகரிகமபெற்ற ஒவ்வொரு தேசத்திலும் கைக்கொண்டிருக்கிறார்கள்.

---

## SHORT STORY.

## துரைசாமி.

---

இப்பேருலகில் சிருஷ்டி மர்மங்களில் ஒன்று மரணம். மனிதன் என்று பிறந்தானோ அன்றே கூடவே "இறப்பு" என்னும் காலதூதும் ஏற்பட்டேயிருக்கிறது. பிறந்தவன்றே யிறப்பதும் சில நாள் ஆடிப்பாடி அமருகிறதும் உலகவியற்கை. இம் மண்ணுலகில்வாழும் மாந்தர்களில் எவ்வளவு புகழ் படைத்தவனாயினும், எவ்வளவு கல்வியிற் பூர்ண பாண்டித்ய முடையவனாயிருப்பினும், அகிலப்பிரபஞ்சமுமாளும் மஹா மண்டலேசுவரனாயினும் கடைசியாய் ஒரு பிடி வெண்சாம்பலாகின்றனரே யன்றி நிலைத்திருப்போர் எவரையுங்காணோம். அந்தப் பிடிசாம்பலும் காற்றுவந்தாலடித்துக்கொண்டு போய்விடுகிறது. பார்க்கப்போனால் மிச்சம் யாதொன்றுமில்லையே. ஆ! இப்பிரபஞ்சத்தில் மானிடவாழ்வைக்குறித்து ஆலோசிப்பின் என்ன ஆச்சரியமாயிருக்கிறது.

"சீலமுங்கருமமும் சிதைவில் செய்கையும்
சூலமுந்திகிரியும் சொல்லுந்தாங்கிய
மூலம்வந்து தவிய மூவர்க்காயினும்
காலமென்றொரு வலைகடக்கலாகுமோ"

என்றபடி அத்திரிமூர்த்திகளே மாயாபாசத்திற் கட்டுண்டுழலும்போது இம்மானிடன் எம்மாத்திரம்!

"எப்போதாயினுங் கூற்றுவன் வருவா
னெப்போதந்தக் கூற்றுவன்றன்னைப்
போற்றினும்போகான் பொருளொடும்போகான்
சாற்றவும்போகான் றமரொடும்போகான்
நல்லாரென்னானல் குரவறியான்
தீயாரென்னான் செல்வரென்றுன்னான்
றரியாளொருக்கணந் தறுகணாளன்
னுயிரொடுபோவா னுடல்கொடுபோகான்"

என்ற வண்ணம் எப்போதாயினும் கூற்றுவன் வந்தே தீருகிறான். இம்மானிடன்வாழும் இச்சின்னாட்களுள் இவ்வுலகில் நடக்கும் காரியங்களென்னே? இதற்குள் அவனுக்கு சம்பவிக்கும்

கஷ்ட நிஷ்டூரங்களெவ்வளவு? இவ்வளவையும் அனுபவித்து "அலக்கைகொடுத்து உலக்கைசாத்தி" நடத்திவரவேண்டியிருக்கிறது. இவ்வுலகம் நமக்காக சிருஷ்டிக்கப்பட்டதல்ல. நம்முடைய ஆக்ஞாசக்கிரத்தை அது கவனியாது தன்கால சக்கிரத்தைச் சுழற்றிக்கொண்டு செல்லா நிற்கின்றது. நமக்குள் அடங்கிய உலகமானால் நல்லவர்களுக்கு "அடைக்கலான் குருவிக்கு ஆயிரத்தெட்டுகண்டம்" என்பதுபோல் கஷ்ட நிஷ்டூரங்கள் ஒன்றின்பின்னொன்றாய் நெருங்கிச் சூழ்ந்துகொண்டு தலையெடுக்கவொட்டாது தவிக்கச்செய்வதேன்? துஷ்டர்கள் பெருப்பதேன்? வயோதிகரும் அமங்கலிகளும் அதிகமாய் வீடுநிறைவதேன்? ஆகவே நம்முடைய செயலன்றி கடவுளின் திருவருளின்செயலேயாம். நிற்க, இவ்வுலகில் "பிறக்கும்பொழுது கொடுவந்ததில்லை, பிறந்துமண்மேல் இறக்கும்பொழுது கொடுபோவதில்லை" என்றபடி தங்கப்பணிதிகள், நகைநட்டு, நாணயங்கள், பட்டுப்பட்டாவளிகள், பஞ்சபட்சியபரமான்னங்களுடன் கூடியசுகமான இராஜபோஜனங்கள், முதலியனவெலாம் இங்குவந்துதான். சந்திசிரிக்கத் திண்டாடுவதும், எல்லாருக்கும் ஏளனமாய்ப்போக சாண்வயிறுவளர்க்க யாசிப்பதும், பாடுபடுவதும் இங்குவந்துதான். இதற்கெல்லாம் காரணபூதமாயிருப்பதும் பொருள்தான். அது இல்லாவிடில் அவன் நடைப்பிணத்துக்குச் சமானமாகிறான். "பொருளில்லார்க் கிவ்வுலகமில்லை" யெனவும் கூறப்பட்டிருக்கிறதல்லவோ? மிகுந்த செல்வவந்தராயிருந்து ஏதோவிதிவசத்தால் தரித்திர நிலைமையையடையின் எவருங் கவனிக்கிறார்களில்லை. "இல்லானை இல்லாளும் வேண்டாள், ஈன்றெடுத்த தாயும்வேண்டாள்" அல்லவோ? இதைக்குறித்தன்றோ ஔவைப்பிராட்டியார் "கொடிது கொடிது வறுமைகொடிது" எனத்திருவாய்மலர்ந்தருளினார். இப்பேர்ப்பட்ட வறுமைச் சாகரத்தில் மூழ்கினவர்களில் நமது சுந்தரமய்யரும் ஒருவர்.

அவர் "தொமறலிங்கம்" என்னும் கிராமத்தில் வந்து வசிக்கத்தலைப்பட்டஉார். கோயம்புத்தூரிலிருந்த தனது வீடும் நிலபலன்களும் ஏலத்தில்போய் விடவே, பெரியபட்டணத்தில் தான் வாழ்ந்ததுபோய் தற்காலம், வறுமைநோயால் இச்சிறுகிராமத்தில்வந்து வசித்துவருதலையும், முன்பு செல்வமுள்ளபோது "தர்மம் தலைகாக்கும்" என்ற நீதிவாக்கியத்தைக் கடைப்பிடித்தொழுகியதையும், அதன் மூலமாய் தான் நல்லஸ்திதியைவிட்டு தரித்திர நிலையையடைந்ததும், தற்காலம் சொல்லமுடியாத வறுமையென்னும் கொடிய நோயைத் தான் அனுபவிப்பதையும், முன்பு வெகு பிரீதியாயிருந்த உறவின்முறையார் கவனியாதிருப்பதும், அவருக்குப் பசுமரத்தாணிபோல் மனதில் பதிந்துகிடந்தன.

தடஸ்தமாய்நிற்கும் நீருள்ளகேணியில் கல்லையெறியின் அந்நீர் எவ்வாறு தத்தளித்து நிலைகுலையுமோ அங்ஙனமே அவர்மனமும் தத்தளித்து நிலைகுலைந்தது. அவருடைய தங்கம்போன்ற மேனியும், தாமரைத்தளம்போன்ற விசாலித்தகண்களும், கருணையும், உவகையும், ஊடாடிநிற்கும் வதனமும் போய், கண்கள் உட்குழிந்து, உடல்கறுத்து, மெய் வாடி, பயித்தியகாரனைப்போல் பக, பகவெனச்சிரிக்கிறதும், "அப்படியா! தெய்வமே! எல்லாமுன்னுடையபாக்கியம்" என ஸ்வாமியைநோக்கி இருகைகளையும் விரித்துக்கொண்டு நீர் மாலை மாலையாய்ச் சொரிகிறதுமாய் கரையற்ற விசனக்கிராந்தத்தில் மூழ்கினவரானார். அவர் சிலவேலைகளில் தனக்குத்தானே "சீ! என்னபாழுலகம். பையூரிலேயிருந்து பாழூரிலேபிறந்து அவதிப்படவா விதித்தாய் சிவமே! எவ்வளவு கொடுத்துவைத்திருக்கிறார்களோ அவ்வளவுதான் கிடைக்கும். வீணாக வருத்தப்பட்டுச்சாவதில் லாபமென்ன? நாமென்னபாவம்பண்ணினோமோ நன்றாய் அனுபவிக்கிறோம்" என்று தனக்குள்தானே வெறுத்துக்கொள்வார். சிலவேளைகளில்,

"வறியவர் செல்வராவர் செல்வர்பின் வறியராவர்
சிறியவ ருயர்ந்தோராவ ருயர்ந்துளோர் சிறியராவர்
முறைமுறை நிகழுமீது முன்னையூழ் வினையேகண்டா
யெறிகதிர் வழங்குஞாலத் தியற்கையுமினையதன்றே"

எனப் பாடிக்கொள்வார். இப்படியாக நாள் போவது தெரியாமல் தன் காலத்தைக் கடத்திவந்தார்.

இப்படியாகக் காலங்கடத்திவருகையில் "அந்தோ!" அவரது அருமைத்திருமனைவி வெங்கம்மாள் பரலோகமடைந்தாள். அடடா! அவரென்செய்வார்! "செய்வதெல்லாம் செய்! பகவானே! என்னுடைய தீவினைக்கும் துன்மார்க்கத்திற்கும் அவ்வளவும் வேண்டியதுதான்?" எனத் தலையிலடித்துக்கொண்டு விசனாக்கிராந்தராய் அன்னபானாதிகள்கூட செவ்வையாய் செய்துகொள்ளாமலிருந்தார். இப்படியிருக்க "உகிர்சுற்றின்மேல் உலக்கைவிழுந்தது" போல் அவரது அருமைப்புத்திரியும் அற்பாயுசாய்க் காலஞ்சென்று விட்டாள்.

அவர் நிலைமை எப்படியிருக்கும்? முன்னமேயே விரக்தி வைராக்கியத்துடன் இருந்த அவருக்கு இதுவும் சேர்ந்தது. "என் காலக்கொடுமைக்கும் தீவினைக்கும் அனுபவிக்கத்தான்வேணும். மாட்டேனென்றால் தீருமோ" என்று கண்களில் நீர்தளும்பச் சொல்லிப் பின்பு "நமக்குப் பிள்ளையேது? குட்டியேது? இருந்ததுக்கெல்லாம் காலம்வந்து வாரிக்கொண்டுபோய்விட்டது. நமக்குத்தான் வரவில்லை, நாம்தான்பாக்கி. அந்தப்பயல் துரைசாமி ஓடிப்போன காமாட்டிப்பயல் இருக்கிறானோ? போய்விட்டானோ? அல்லது எங்கேயாவது கோவிந்தக்கொள்ளி வாங்கிக்கொண்டானோ தெரியவில்லை. அவன் இனி எக்கேடுகெட்டால் எனக்கென்ன? இதோ! எங்கேயாவதுபோய் நாக்கைப்பிடுங்கிக்கொண்டு இப்பொழுதே பிராணனை விட்டுவிடுகிறேன். அப்புறம் தொல்லையேயில்லை." எனத் துணிந்து கண்களிலிருந்து அடக்க, அடக்கப் பெருகும் கண்ணீரைக் கையால் சுண்டியெறிந்துகொண்டே கட்டிய வேஷ்டியுடன்,

"கன்றினுக்கு சேதா கனிந்திரங்கல் போலெனக்
கென்றிரங்குவாய்கருணை யெந்தாய் பராபரமே"

எனப்பாடிக்கொண்டு புறப்பட்டு எங்கேயோ போய்விட்டனர். அவரைப்பற்றிய சங்கதி ஒன்றும் தெரியவேயில்லை.

* * *

இங்ஙனமிருக்க மதுரைமா நகரத்தின்கண் ஓர் நாட்காலை சூரியன் கிழக்கே உதித்தனன். அவனது பரந்த செஞ்சுடரொளிகள் தங்கக் கம்பிகள்போல் விரிந்து பள, பளவென ஒளி வீசி ஜாஜ்வல்லியமாய்த் துலங்கிற்று. வைகையாற்றின் ஜலமானது பொன்னீர்போலவிருந்தது. அந்நன்னீரில் சிறுமீன்கள் துள்ளிக்குதித்தன. தங்கத்தாம்பாளத்தில் வைரக்கற்கள் பொதிக்கப்பட்டாற்போல் பளபளத்து ரமணீயமாயிருந்தது. எண்ணிறந்த சோலை சிங்காரவனங்களின் காற்றும் நறுமணம் கமழும் நந்தவனத்தின் காற்றும் எழும்பி வீசி இனிமையையூட்டிற்று.

அதன் வழியேசென்றால் பெரியமாடமாளிகைகளும், கூடகோபுரங்களும், நெருங்கிய பெரும் வீதியொன்றிருக்கிறது. அதன் கடைக்கோடியில் ஒரு மண்டபம் தென்பட்டது. அது வழிப்போக்கர்களும் ஏழை எளியவர்களும், தங்குமிடமாகிய ஒரு பெரும் மடம். அம்மடத்தில் ஏகக்கூச்சல்போட்டுக்கொண்டு அனேக பிரயாணிகளும், வழிப்போக்கர்களும் உட்கார்ந்து பேசிக்கொண்டிருந்தனர். அம்மடத்தின் வாசலிலிருந்த ஓர் பெரும் பாராங்கல்லில் ஒருவர் நீறுபூசிய நெற்றியும் தேஜோமயமாய் விளங்கும் வதனமும், ஜபமாலையையுடைய கையுமாய்ச் சப்பளம் கூட்டிக்கொண்டு உட்கார்ந்திருந்தனர். சிறிதுநேரம் சென்றபின்பு "சங்கரா! சம்போ!!" என இரண்டுதரம் பெருமூச்சுவிட்டுக்கொண்டு உரக்கச்சொல்லிவிட்டு எழுந்து பக்கத்திலிருந்த "பூலோககைலாசம்" என சிறப்புற்றோங்கிய ஹாலாஸ்ய க்ஷேத்திரத்துக்குள் நுழைந்தார்.

* * *

அப்பொழுது கோவிலில் ஏகக்கூட்டம். அரக்கு வளையல், பம்பாய்வளையல், முதலிய தினுசு தினுசானவளையல்களை யணிந்துகொண்டு சிரித்து விளையாடிக்கொண்டு தங்கள் தோழிகளோடு கோயிலுக்குச்சென்ற பெண்மணிகளனேகர்; புஷ்பம்வாங்கியும் தேங்காய், பழம், வெற்றிலைபாக்கு முதலிய தீபாராதனைக்கு வேண்டும் சாமான்களை தட்டிலெடுத்தேந்திக்கொண்டு நீறு பூசிய நெற்றியுடன் பட்டகச்சம் சோமன் தரித்துக்கொண்டு தம்முடன் ஸ்வாமி தரிசனார்த்தம் வருவாரை அழைத்துச்செல்ல, ஆவலுடன் அங்கு மிங்கும் திரிந்தபட்டமாரனேகர்; மிட்டாய் வாங்கியும் "குடகாரஞ்சிநோக்குவேணுமாடா! நேக்கு கிரேப்புமாம்பழம் வாங்கிக்கிறேண்டாப்பா" எனக்களங்கமற்ற மனதோடு உற்சாகத்துடன் சொல்லிக்கொண்டு தம்மையழைத்துச் செல்லுமவரோடும் தம் நேயரோடும் "அப்பா! அதோ பாரப்பா! தலையாட்டி யானையை" எனத் தம் கையால் சுட்டிக்காட்டி கூச்சலிட்டுக்கொண்டும் குதித்துக்கூத்தாடிச் சென்ற பொடியர்களனேகர். "சங்கிடி சேலைவேணுமாடி வெங்கிடசுப்பி" இரவிக்கையைப்பாரடி அரக்குவைந்திருக்கிறது அலமேலி" என்றுகொண்டு கடலைப்புட்டாணி, தாளிசபத்திரி, கொரநாடு, முதலிய தினுசு தினுசானசேலை பேரம் செய்தும் இராக்ஷசிகளைப்போல் தங்கள் நீண்ட வாய்களைத்திறந்துகொண்டு "அய்யன்பிடாரிபோல்" ஆவலித்த ஸ்திரீகளோ அனந்தம். தம் கணவருடன் உரையாடிக் கையாடி, சல்லாபமாய்ச் சென்ற சரசிகள் அனேகர். "நேக்கு ஜிகணுபொம்மை வாங்கிக்கொடு மரப்பாச்சிவாங்கித்தா" என்று கீழே கட, கடவென்று விழுந்து புரண்ட சின்னஞ் சிறியார்கள் யதேஷ்டம். கண்ணிருந்தும் ஆகாசத்தைப் பார்த்துக்கொண்டு நடந்து தடுக்கிவிழுந்து தட்டுக்கெட்டுத்தடுமாறிச் செல்லும் கிழங்கெட்டைகளும், விடோபாய்சாக்களும் எண்ணிறந்தவை. அன்று

வெள்ளிக்கிழமை; அம்மனுக்கு அன்று முத்துக் கொப்பு சாத்துகிற நாள் ஏகக்கூட்டமாயிருந்தது. அம்மன் சன்னிதானத்திற்கெதிரே முட்டிக்கொண்டும் மோதிக்கொண்டும் செல்லும் கூட்டத்தைவிட்டு அம்மன் சன்னிதிக்குள்செல்வோம். அங்கே நக்ஷத்திர விளக்குகள் ஆயிரம் சூரியன் உதித்தாற்போல் தேஜோமயமாயிருந்தது. அதிலேயும் ஸ்திரீகளும் புருஷர்களும் கணக்குவழக்கில்லை. தூங்காமணி விளக்குகள் அனேகம் பாங்காக ஏற்றப்பட்டிருந்தன. அம்மன் எதிரே அனேக பக்திமான்கள் நின்றுகொண்டு சிலர் கீர்த்தனைகளைப்பாடியும், சிலர் ஸ்லோகங்களுச்சரித்தும், சிலர் "ஜெகதாம்பிகே, நித்யகல்யாணி, மீனும்பிகே என்னைக்காப்பாற்றுவாயடிதாயே" என வாசகரூபமாய் வேண்டிக்கொண்டு மிருந்தனர்.

அவர்களுள் நாம் முன்பு சொன்ன பெரியவர் இருகையும் சிரமேற்குவித்து வெகு பயபக்தியுடன்

ஆதிபரா பரையாகி யாத்ம மாகி
அன்பத்தோ ரக்ஷரத்துள் ளமர்ந்து நின்ற
ஜோதிசிற வடிவாகி சூக்ஷ்ம மாகி
சூக்ஷத்தின் பொருளாகிச் சுடரு மாகி
பாதிமதிச் சடையனிடப் பாக மாகி
பையரவை மோதிரமா யணிந்த தேவி
வீதியென்ற நடுவீதிக் குள்ளி ருந்த
வேதாந்த மீனாட்சி விமலி நீலி.
நீலியென்றுஞ் சூலியென்றும் மவுனத் துள்ளே
நிரஞ்சனமாய் நின்றொளிர்ந்த வடிவ மாகி
நாலிதழாம் புட்பவிரு தயத்தி னுள்ளே
நாதாந்த வடிவாகி மோன மாகி
ஆலிலைமேற் பள்ளிகொண்டோன் அம்ஸ மாகி
அருவுருவா யமர்ந்துநின்ற வம்மை யாகி
வேலிலெழுஞ் சத்தியென்று விளங்கி நின்ற
வேதாந்த மீனாக்ஷீ வேத வேந்தே.

எனப் பாடித் துதித்துப் பின்

ஆதிநீ போற்றிபோற்றி (என்) அமமணீ போற்றிபோற்றி
நீதிநீ போற்றிபோற்றி நித்யமே போற்றிபோற்றி
சோதிநீ போற்றிபோற்றி சுந்தரரூபி போற்றி
போதிக்கு மூலாதார அம்மணீ போற்றிபோற்றி.

எனப் போற்றித் துதித்துவிட்டு தீபாராதனை யாகும்போது "ஓம் ஹரஹர! மீனாக்ஷி காத்தருள் புரியடி தமியேனைக் காரடி! ஆனந்தவல்லி அருள்புரியடி" எனக் கன்னத்தில் தட்டிக்கொண்டு இருகையாலும் தீபாராத்னையையேற்றுக் கண்ணிலொற்றிக்கொண்டு நிற்கையில் நாலைந்துபேர் தீவட்டிபிடிக்க, வில்லை டலாயத்துகள் போட்ட சேவகன்கள் பின்னேவர, ஐந்தாறு பட்டமார்கள் கைகட்டி ஜனங்களை விலக்கிக்கொண்டு முன்னேவர, இடையில் சரிகைத்துப்பட்டாவும், காதிலும் கைகளிலும் பச்சைகளும், வைரங்களும், ஜொலிக்க, நெற்றியில் விபூதி ரமணீயமாய்த் துலங்க, கழுத்தில் தங்க ருத்திராக்ஷம் துலங்க ஒருவர் கோயிலுள் பிரவேசமாயினர். அவர் அவ்வூர் சப்ஜட்ஜ். அப்பெரிய மனுஷரிடம் நற்குணங்க ளெவ்வளவுளவோ அவ்வளவும் பொருந்தியிருந்தன. நித்தியம் கோயிலுக்குவரத் தவறார். தன் குலாசார ஒழுக்க வழக்கங்களை தவறவிடாத்தன்னியர். பெரியோர்களிடம் பஞ்சப்பிராணன். பெருந்தன்மையே பிறவிக்குணம். இப்பேர்ப்பட்ட ஜனரஞ்சகர் தற்செயலாய் நாம் முன்பு சொன்ன பெரியவரைப்பார்க்கநேர்ந்தது. உடனே வெகு பிரிய மரியாதையுடன் வேஷ்டியை இடுப்பில் வரிந்துகட்டி சாஷ்டாங்க தெண்டன் சமர்ப்பித்து "ஏ! ஸ்வாமின்! தாம் யாரோ தெரியவில்லை. தம் முகம் தேஜோமயமாய்த் துலங்குகிறது. எக்ஞோபவீதம் தங்கள் யஜஸ்ஸைத் தெரிவிக்கின்றது. என் அன்பார்ந்த விப்பிரசிரேஷ்டர் பசியால் தள்ளாடியவர்போலும் தோற்றுகிறது. தயைகூர்ந்து என் குடிலில் இன்று கருணையுடன் பிக்ஷை யேற்றுக்கொள்ள அனுக்கிரகிக்கவேண்டும்" எனவருந்த அம்மறையவரும் யாதும்பேசாது "சத்தியமே ஜயம்" என்றுசொல்லிப் பின்தொடர்ந்தார். அனேக சந்துபொந்துக்களையும், மூலைமுடக்குகளையும் தாண்டி ஓர் பெரும்வீதியிலிராநின்ற ஒரு பெரிய வீட்டினுள் நுழைந்தார்கள்.

வீட்டிற்கழைத்துப்போன சப்ஜட்ஜ் அவர்கள் ஆசார உபசாரம் செய்து தானே கையில் பதார்த்தங்களை யெடுத்துக்கொண்டு வட்டிக்கத் தலைப்பட்டார். சிறிதுநேரம் அவ்விடமுள்ள இலையையும், சுற்றுமுற்றுமுள்ள சாமான்களையும், பார்த்துக்கொண்டிருந்த சுவாமிகளுக்கு எதற்கோ தன்னையறியாமலே கண்களில் மள, மளவென ஜலம் பெருகிற்று. இதனைக்கண்ட அவர் "ஏ ஸ்வாமின்! தெரிந்து யான் தமக்கு யாதோர் தப்பிதமும் செய்யவில்லையே? அப்படியேயிருந்தாலும் மன்னித்தருளல்வேண்டும்" என வேண்ட, அப்பெரியவர் "என் விதியை நொந்தேன் என்னையனே" என "அதை வெளியிட்டருளலாம் விருப்பமிருப்பின்" என இவர் வினவ, அவர் "இப்பாவி சரிதையைக் கேட்பாய்" என சாங்கோபாங்கமாய் வெளியிட்டருளினர்.

கும வேத...
வெனில் ஆத்மா தூயமை-

"ஐயோ! அண்ணா!! வந்துசேர்ந்தாயோ! அப்பாவி துரைசாமி என்று ஓடி பிதுர் துரோகம் பண்ணின குமாரன் நான்தான். என்னை மன்னிப்பாயண்ணா? நல்லவேளை உன்னைத் தெய்வம் கூட்டிவைத்ததே "முதலில் சாப்பிடு அண்ணா! பின்பு என் எல்லா சங்கதியும் சவிஸ்தாரமாய்ச் சொல்கிறேன். மிகவும் களையாயிருக்கிருய்" என்று சொல்லி ஆவலால் தன் தந்தையாரைப்போய்க் கட்டித்தழுவினன். இதனைக்கண்ட அப்பெரியவர் "ஏ பகவானே! ஏதுக்கோ உன் செயலிப்படி" என்று கூச்சலிட்டார்.

* * * *

"நீருநிழலு நிலம்பொதியும் நெற்கட்டும்
பேரும்புகழும் பெருவாழ்வு—மூரும்
வருந்திருவும் வாழ்நாளும் வஞ்சமில்லார்க்கென்லுந்
தருஞ்சிவந்த தாமரையாடாள்"

K. S. வைத்திநாதய்யர்.

## ஸ்ரீதத்துவபோதம்.

### III. ஆத்மசொருபம்.

வினா:—அங்ஙனமாயின் ஆத்மாவின் சொருபம் யாது?

விடை:—சத்து, சித்து, ஆனந்தம் ஆத்மாவின்சொருபமாம்.

வினா:—சத்தென்பது யாது?

விடை:—மூன்று காலங்களினு மிருப்பது சத்தாம்.

வினா:—சித்தென்பது யாது?

விடை:— ஞானசொருபம் சித்தாம்.

வினா:—ஆனந்தமென்பது யாது?

விடை:—சுக சொருபம் ஆனந்தமாம்.

இவ்வாறு சச்சிதானந்தசொருபமாகிய ஆத்மாவை (தன்னை) அறியவேண்டும்.

### IV. ஜகஜீவோற்பத்தி.

[இனி ஜகஜீவோற்பத்தி விவரம் கூறுவான், இருபத்திநான்கு தத்துவோற்பத்தியின் கிரமம் கூறுகிருர். இந்த ஜகத்திலுள்ள எல்லாம் இந்த 24-தத்துவங்களுள் அடக்கமாம்.]

வினா:—இருபத்துநான்கு தத்துவோற்பத்தியின் கிரமம் யாது?

விடை:—பிரமத்தை ஆசிரயித்ததும், சத்துவ ரஜோ தமோ குணவடிவினதுமாகிய மாயையுளது. அதினின்றும் ஆகாயமும், ஆகாயத்தினின்று வாயுவும், வாயுவினின்று தேயுவும், தேயுவினின்று அப்புவும், அப்புவினின்று பிருதிவியும் உண்டாயின. இவ்வைந்து தத்துவங்களுள் ஆகாயத்தின் சாத்துவிகாமிசத்தினின்று சுரோத்திரேந்திரியமும், வாயுவின் சாத்துவிகாமிசத்தினின்று துவக்கிந்திரியமும், அக்கினியின்சாத்துவிகாமிசத்தி னின்று சக்ஷுரிந்திரியமும், ஜலத்தின் சாத்துவிகாமிசத்தினின்று இரசனேயிந்திரியமும், பிருதிவியின் சாத்துவிகாமிசத்தினின்றி கிராணேந்திரியமும் உண்டாயின. இவ்வைந்து தத்துவங்களின் * சமஷ்டி சாத்துவிகாமிசத்தினின்று மனம், புத்தி, அகங்காரம், சித்தம், என்னும் அந்தக்கரணங்கள் உண்டாயின. சங்கற்ப விகற்ப வடிவினது மனம்; நிச்சயவடிவினது புத்தி; யான் என்பதைச் செய்வது அகங்காரம்; சிந்தனையைச் செய்வது சித்தம். இவற்றுள் மனதிற்குச் சந்திரனும், புத்திக்குப் பிரமனும், அகங்காரத்திற்கு உருத்திரனும், சித்தத்திற்கு வாசுதேவனும் தேவதைகளாம்.

கவனிப்பு.—1901-ம் செப்டெம்பர்மீ விவேகசிந்தாமணி 147-வது பேஜில் ஆனந்தகோசத்தினுடைய விடையில் இருக்கும் * † இக்குறிப்புகளின் அர்த்தம்:

* இரஜோ தமோ குணங்களால் அமிழ்த்தப்பட்ட சத்துவகுணம் மலின சத்துவ குணமாம்.

† பிரியாதி விருத்திகளாவன:—விரும்பிய பொருளைக் கண்ட காலத்துண்டாகும் சுகவிருத்தி பிரியவிருத்தியாம்; விரும்பியபொருள் இடைத்த காலத்துண்டாகும் சுகவிருத்தி மோதவிருத்தியாம், விரும்பியபொருளைப் போகிக்குங் காலத்துண்டாகும் சுகவிருத்தி பிரமோத விருத்தியாம்,

* சமஷ்டி - சேர்க்கை,

இவ்வைந்து தத்துவங்களுள் ஆகாயத்தின் இராசதாமிசத்தினின்று வாக்கிந்திரியமும், வாயுவின் இராசதாமிசத்தினின்று பாணீந்திரியமும், அக்கினியின் இராசதாமிசத்தி னின்று பாதேந்திரியமும், ஜலத்தின் இராசதாமிசத்தினின்று உபஸ்தேந்திரியமும், பிருதிவியின் இராசதாமிசத்தி னின்று குதேந்திரியமும் உண்டாயின. இவற்றின் சமஷ்டி இராசதாமிசத்தினின்று பஞ்சப் பிராணனுண்டாயின. இவ்வைந்து தத்துவங்களின் தாமதாமிசத்தி னின்று பஞ்சீகிருத பஞ்சதத்துவங்கள் உண்டாயின. இஃது இருபத்துநான்கு தத்துவோற்பத்திக் கிரமமாம்.

வினா:—* பஞ்சீகரணம் எங்ஙனம்?

விடை:—இப்பஞ்ச மகாபூதங்களின் தாமசாம்சசொரூபமாகிய ஒவ்வொரு பூதத்தையும் இவ்விரண்டாகப் பிரித்து, அவற்றின் ஒவ்வொரு பாதியை வேறே சும்மா விருத்தி, மற்ற ஒவ்வொருபாதியையும் நந்நான்காகப்பிரித்து, தமது பாதிகளின் வேறாகிய பாதிகளில் தம் பாகங்கள் நான்கையும் சேர்க்க, அப்பொழுது † பஞ்சீகரணம் ஆகின்றது. இப்பஞ்சீகிருத பஞ்ச மகா பூதங்களினின்றும் ஸ்தூல சரீரம் உண்டாகின்றது. இவ்வாற்றாற் பிண்ட பிரமாண்டங்களுக்கு ஐக்கிய முண்டாயிற்று.

---

## V. ஜீவேசுரபேதம்.

வினா:—ஜீவனென்பது யாது? ஈசுவரன் யாவன்?

விடை:—ஸ்தூலசரீராபிமானியாய் ஜீவனென்னும் பெயருடையதாய்ப் பிரமத்தின் பிரதிபிம்ப முண்டாகின்றது. அச்சீவனே பிரகிருதியினால் ஈசுவரனைத் தன்னின் வேறாக அறிகின்றது. அவித்தையாகிய உபாதியுடையதாய் ஆத்மா ஜீவனெனப்படுகின்றது; மாயோபாதி யுடையதாய் ஈசுவரன் எனப்படுகின்றது. இவ்வாறு உபாதிபேதத்தால் ஜீவேசுவர பேத திருஷ்டி எதுவரையிலு மிருக்கின்றதோ, அதுவரையிலும் ஜனன மரண முதலிய வடிவினதாகிய சம்சாரம் நீங்குகிறதில்லை. அக்காரணத்தால் ஜீவேசுவரர்களின் பேத புத்தி (ஜீவன் வேறு ஈசுவரன் வேறு என்னும் ஞானம்) அங்கீகரிக்கத் தக்கதன்று.

வினா:—அப்படியானால் அகங்காரத்தோடு கூடிய கிஞ்சிஞ்ஞனாகிய ஜீவனுக்கும், அகங்கார மில்லாதவனும் சருவஞ்ஞனுமாகிய ஈசுவரனுக்கும் தத்துவமசியென்னும் மகாவாக்கியத்தால் எப்படி அபேதஞானம் உண்டாகும்? இருவரிடத்தும் விரோத தருமம் காணப்படுதலால்.

விடை:—அங்ஙனம் அன்று; ஸ்தூலசூக்ஷ்ம சரீராபிமானி துவம்பத வாச்சியார்த்தமாம்; உபாதியினின்று விடுபட்டதும் சமாதிதசையடைந்ததுமாகிய சுத்த சைதன்யம் துவம்பத லக்ஷியார்த்தமாம். இப்படியே சருவஞ்ஞத்துவ முதலிய வற்றோடுகூடிய ஈசுவரன் தற்பத வாச்சியார்த்தமும், உபாதியின்றிய சுத்த சைதன்யம் தற்பத லக்ஷியார்த்தமுமாம். ஆகவே ஜீவேசுவரர்களுக்குச் சைதன்ய வடிவமாக அபேதங் கூறுதலில் பாதகமின்று. இவ்வாற்றான் வேதாந்த வாக்கியங்களாலும் சற்குரு உபதேசத்தாலும் எல்லாப் பூதங்களிடத்தும் எவர்களுக்குப் பிரயபுத்தி (சுத்த சச்சிதானந்த பிரமம் நான் என்னும் நிச்சயம்) உண்டாயிருக்கின்றதோ, அவர்களே ஜீவன் முக்தர்கள் எனப் பொருளாகின்றது.

---

## VI. ஜீவன்முக்தன்.

வினா:—ஜீவன்முக்தன் என்பவன் யாவன்?

விடை:—தேகம்யான், புருஷன்யான், பிராமணன்யான், சூத்திரன்யான் என்னும் திடநிச்சயத்தைப்போல, யான் பிராமணன் அல்லன் யான் சூத்திரனல்லன், யான் புருஷனலலன், யான் அசங்க சச்சிதானந்த சொப்பிரகாச சரு

---

* பஞ்சீகரணம் - ஐவைந்தாக்கல்.

† இப்பஞ்சீகரணத்தை ஸ்ரீவிசார சந்திரோதயம் என்னும் நூலில் விரிவாய்க் காணலாம்.

வெ...

வாந்தரியாமியாகிய சிதாகாசசொரூபன் என்னும் திடநிச்சய வடிவினதாகிய அபரோக்ஷ ஞான முடையவன் ஜீவன்முக்தன் எனப்படுவன். பிரமமே யானென்னும் அபரோக்ஷ ஞானத்தால் சகல கருமபந்தங்களினின்றும் விடுபட்டவனாகின்றான்.

வினா:—கருமங்கள் எத்தனை வகையாம்?

விடை:—ஆகாமியம், சஞ்சிதம், பிராரத்தம் என்னும் பேதத்தால் மூவகையாம்.

வினா:—ஆகாமியம் என்பது யாது?

விடை:—வர்த்தமான தேகத்திற் செய்யப்படும் புண்ணிய பாவமாகிய கருமம் எதுவோ, அது ஆகாமியம் எனப்படும்.

வினா:—சஞ்சிதம் என்பது யாது?

விடை:—அனந்தகோடி ஜன்மங்களுக்குக் காரணவடிவமாய் முன்னரே சம்பாதிக்கப்பட்டுள்ள கருமக் கூட்டம் எதுவோ, அது சஞ்சிதம் என அறியத்தக்கது.

வினா:—பிராரத்த கருமம் என்பது யாது?

விடை:—இச்சரீரத்தை யுண்டுபண்ணி இவ்வுலகத்தில் இவ்வாறு சுகதுக்காதிகளைத் தரும் கருமம் எதுவோ, அது பிராரத்தமாம்.

வினா:—பிராரத்த கர்மம் எதனால் நசிக்கும்?

விடை:—'பிராரத்த கரும நாசம் போகத்தினாலேயே யுண்டாம்' என்பதனால் பிராரத்த கர்மம் போகத்தினால் நஷ்டமாம்.

வினா:—அப்படியானால் சஞ்சித கருமம் எதனால் நசிக்கும்?

விடை:—சஞ்சித கருமம் பிரமமே நான் என்னும் நிச்சய வடிவினதாகிய ஞானத்தாற் கெடும்.

வினா:—ஆகாமிய கருமம் எதனாற் கெடும்?

விடை:—ஆகாமிய கருமமும் ஞானத்தாற் கெடும். தாமரையிலையிற் றண்ணீர்போல் ஆகாமிய கருமத்திற்கும், ஞானிக்கும் சம்பந்தமில்லை.

வினா:—அப்படியானால் அவர்களாற் செய்யப்படும் புண்ணிய பாவங்களுக்குக் கதி யாது?

விடை:—* ஞானியை எவர்கள் துதித்துப் பூசித்தருச்சிக்கின்றார்களோ, அவர்களை அவன் செய்த ஆகாமிய புண்ணியமும், எவர்கள் நிந்தித்துத் துவேஷித்துத் துக்கத்தைத் தருகின்றார்களோ, அவர்களை அவன் செய்த ஆகாமிய பாவமும் அடைகின்றன.

இவ்வாறு ஆத்மாவையுணர்ந்தவன் "ஆத்மஞானியானவன் சோகத்தைக் கடக்கின்றான்" என்னுஞ் சுருதியினாலும், "காசியிலேனும் சண்டாளனுடைய வீட்டிலேனும் சரீரத்தை விடுக; பற்றொழிந்த இவன் ஞானங்கிடைத்த காலத்தில் முக்தனாகின்றான்" என்னும் ஸ்மிருதியினாலும் சம்சாரத்தைக் கடந்து பிரமானந்தத்தை இகத்திலேயே யடைகின்றான்.

சுபமஸ்து.

ஓம் தத்ஸத்.

---

## சுகுணசுந்தரம்.

### விநாயகர்துதி.

அந்திவானுறு பிறையனன்மேனியி
னந்துகூர்ங்கோடொருபாங்கானன்னுறல்
இந்திபாவெழுபவர்க் கூறுகொன்றிடுந்
தந்திதாண்மலர்முடிதரித்தல்செய்குவாம்.

### கலைமகள்துதி.

வெண்மலர்மாளிகை யிருந்தவேதமாம்
பண்மலர்மொழி புகல்பவளவாயினாள்
தண்மலர்கொண்டடி சார்பவர்க்கருட்
கண்மலர்பூங்கொடி கழல்கள்போற்றுவாம்.

### I.

நெடிய கடல்சூழ்ந்த இவ்வுலகின்கண் பரதகண்டமென்று வழங்கப்பட்டுவரும் இவ்விந்துதேசமிகச் சிறந்தது. அதில் மிக விசித்திரமான மாயா

* 'இதஞ்செய்வோர் புண்ணியங்களையும் துவேஷிப்போர் பாபங்களையும் கொள்ளுகின்றார்கள்' என்பது சுருதி.

புரி என்று ஒரு பட்டணம் உண்டு. அதில் சுசீலன் என்னும் அரசன் அறநெறியிற் கிஞ்சித்தேனும் பிறழாது அரசுசெலுத்தி வந்தான். அம்மகாராஜனுக்கு சாருமதி என்று ஓர் பத்தினியுண்டு. இவர்களிருவருமனதொருமித்து யாதொரு குறைவுமன்னியில் சுகித்திருந்தார்கள். ஆனால் புத்திரஸம்பத்து மாத்திரமில்லாத ஒரு குறைவு அவர்கள் மனதை ஸதா பீடித்துக்கொண்டிருந்தது. ஆனதால் அவர்கள் மக்கட்பேற்றையடைய பேரவாக்கொண்டு இராஜ்ஜியத்தை யமைச்சனாகிய சுமந்திரனிடம் ஒப்புவித்து மரவுரியுடுத்து கானகத்துக்கேகி, பகவானைக் குறித்துக் கொடுந்தவமியற்றி வருங்கால், சர்வதயாபர மூர்த்தியாகிய பரமன் தேவியுடன் காட்சி தந்துசொல்லுகின்றார்; 'மண்டலாதிபனாகிய சுசீலா! உன் தவத்திற்கு மெச்சினேம், உன் பத்தினியின் குணத்திற்கு மகிழ்ந்தனம், உனதுள்ளங்களிக்குமாறு இப்பூமண்டலத்தை ஒரு குடைக்கீழ் ஆளத்திறமையும், இச்சக்தியாயுதத்தினால் யாவரையும் வெல்லுந் திறமையுமுள்ள ஓர் நற்புதல்வனைப் பெறுவாய்,'' என்று ஓர் சக்தியாயுதத்தையுங் கடாட்சித்து, "இனியுன் னகரஞ்சென்று, நீதியாய்ச் செங்கோல் செலுத்தி கடைசியில் உன் பத்தினி சமேதனாய் மோக்ஷ சாம்பிராஜ்யத்தை யடையக்கடவாய்,'' என்று அனுக்கிரகித்து மறைந்தார்.

பக்தி வினயத்துடன் பரமனைக்கண்டு சேவித்த இராஜனும் மனைவியும், ஆனந்தக்கூத்தாடி தமதெண்ண முற்றுபெற்றதையுங் கண்டு களித்து, மாயாதீதனான ஈசுவரனைக் காணாமற்றிகைத்து, எங்கே காணப்போகிறோமென்றேங்கி, தன் மனைவியால் மனந்தேறி, பரமனுடைய அற்புதக்காட்சி இன்னதெனப் பலதடவைகளில் வியந்து, தன்னகரஞ்சேர்ந்து, கடவுட்குச் சதா தொண்டுசெய்து, நீதியாய்த் தர்மந் தழைத்தோங்க செங்கோலோச்சி வந்தான்.

சில நாள் சென்று, தேவி கர்ப்பந்தரித்து, பத்தாமாதத்தில் நல்ல சுப முகூர்த்தத்தில், அழகில் மாரனைப் பழிப்பவனும் இராஜலக்ஷணங்களமைந்தவனும் உள்ள ஓர் புதல்வனை யீன்றாள். குழந்தையைப் பார்ப்போர்கள் அதிசயிக்கும்படியான மிக வற்புதரூபவானா யிருந்ததினால் "சுந்தரன்" என நாமதேயமிட்டழைத்தார்கள். மைந்தனை நாளொருமேனியும்பொழு தொருவண்ணமுமாய் வளர்த்துவந்தார்கள். ஈசனருளால் பிறந்தவனாதலின் அவனது செயல்கள் மிக்க ஆச்சரியமாகவே யிருந்தன.

சுந்தரன் பதின்மூன்றாவது வயது நிறைவதற்குள்ளாகவே சர்வவித்தியா பாரங்கதனும், தனுர்வித்தியாப்ரவீணனும், மிக்க தைரியமுடையவனுமாயினன். இஃதல்லாமலும், தெய்வபக்தி, பெரியோர்களிடத் தன்பு, அடக்கம், பெருந்தன்மை உதாரம், இவைகளுமவனிடம் குடிகொண்டிருந்தன.

அரசாங்கத்தில் வரும்பொருளுரைக்கும் அதிமேதாவியான சுமந்திரனுக்கு "சுகுணன்" என்றொரு மகனுண்டு. அவனும், சுந்தரனைப்போலவே அழகு, வித்தை, புத்தி, பராக்கிரமம், கடவுள் வணக்கம் உள்ளவன்; ஏறக்குறைய சமானமான வயதுள்ளவன்; தகப்பனைப்போன்ற கூரியமனத்தோன். இராஜமைந்தனை எக்காலமும் விட்டுப் பிரியாத நண்பன். அதிகுணசீலன். ஆனதுபற்றி அவனை "சுகுணன்" என்றழைத்தார்கள்.

இவ்விதமாய் சுந்தரன், சுகுணன், இருவரு மனதொருமித்து, இராஜகாரியங்களெல்லாம் நன்காராய்ந்து, தாய்தந்தையர்களுக்கு யாதொரு கவலையுமின்றி தாங்களே பார்த்துவந்தார்கள். இப்படியே இருவரும் பதினெண்வயது பாலகுமாரர்களாகுமுன், இளவரசு, தனது எல்லா சேனை பரிவாரங்களுடனும், ரதகஜதுரகங்களுடனும், தன் பிராணசிநேகிதனும் அதிதீர பராக்கிரமனுமான சுகுணனுடன், தேயங்களைச்சுற்றி திக்கு விஜயஞ்செய்யக் கருதி, பிரயாணப்பட யத்தனித்துத் தன்னை அதி பக்தி வினயத்துடன் விடை கேட்கவந்ததையறிந்த அரசன், மதிவள்ளலாகிய சுமந்திரனையழைத்து, இக்கருத்தைச்சொல்லி, திப்பிரமைகொண்டு "அருமைப்புதல்வன் போரிடப்போவதென்றால் எனதுள்ளம் நடுங்குகின்றதே, என்னசெய்வேன்,'' எனவியசனமுற்று, ஏங்கித்திகைத்து, எதிரில்நின்ற இளஞ்சிங்கங்களாகிய சுந்தரன், சுகுணன், இவ்விருவர்களையும் நோக்கி, "என்னிளங்காளைகாள்! என்னகாரியஞ்செய்ய முயன்றீர்கள். மிக்க வல்லவர்களாகிய எல்லாவரசர்களையும் வெல்லுவதென்றால் இலேசாய் நினைத்தீர்களா? நான் சொல்லுவதைச் சற்றுக் கவனியுங்கள், என் கண்மணிகாள்! கொடுந்தவமியற்றி கடவுளருள்பெற்ற என் மனதை நோகச்செய்யாதீர்கள், நான் செய்யப்போகு மணக்கோலத்தால், என்னைக் களிப்பித்து, இவ்விராஜ்யபாரத்தை வகித்து, பிறகு உங்கள் திறமையை வெளியிடலாம்' என்றுசொன்ன பிதாவை நோக்கி இராஜதனயன் "மகாராஜரே! க்ஷத்திரியர்களுக்கு இதரவரசர்

களை வலுவில் யுத்தத்திற்கழைத்து வெல்லுவதனாலன்றோ சூரத்துவமும் ஏகசக்ராதிபத்யமும் கிடைக்கும். பின்னு மிப்பூப்பிரதக்ஷணஞ்செய்து அவ்வவ்விடங்களின் விநோதங்களையும், ஜனங்களின் தன்மையையும் ஆராய்வதனாலன்றோ, உலகநடை நன்றாய்த்தெரியும், உலகநடை நன்காராய்ந்து வெற்றிவேந்தனாய் பூபாரத்தை வகித்தாலன்றோ, நம்மை மற்றெல்லா வேந்தர்களும் மதித்து கப்பங்கட்டி நமக்கடங்கி நடப்பார்கள். அப்பொழுதல்லவா நாம் எல்லாரினு மேலானவரசனாகலாம்! இராஜதர்மங்கள் முற்றுமுணர்ந்த இம்மந்திரிசிரேஷ்டனுக்கும் எல்லாம் தெரிந்தவிஷயந்தான். ஆகையால் யாதொரு தடையுங்கூறாது இக்ஷணமே எங்களிருவரையும் வாழ்த்தியனுப்பக்கடவீர்கள்" என்று வினயத்துடன் வேண்டினான். அமைச்சன் தீர்க்காலோசனைசெய்து "இவர்களை நாம் தடுக்கவொண்ணாது, அனுப்பவேண்டும்; ஜயசீலர்களாய் வருவார்களென்பதில் ஐயமில்லை; மேலு மீசுவரானுக்கிரகத்தால் கிடைத்த சக்தியாயுதத்தைக் கொண்டு போவார்களேயானால் யாதொரு தீங்கும் நேரிடாது" என்று அநேகவிதமாய்த் தேறுதல் சொல்ல, இராஜனவர்களை "விஜயமாக வரக்கடவீர்கள்" என்று வாழ்த்தி சக்தியாயுதத்தையும் சுந்தரன் கையிற்கொடுத்து, சுகுணனுக்கும் ஓர் கூரியவாளைக் கொடுத்தனுப்பினான்.

அரசனிடஞ் செலவுபெற்றுக்கொண்டு இராஜகுமாரனும் மந்திரிகுமாரனும் தங்கள் சைனியங்களுடன் பிரயாணமாகி ஆரண்யமார்க்கமாய்ப் போகுங்கால், அநேக துஷ்டமிருகங்களை வதைத்தும், அங்குற்ற நற்றவமியற்றும் முனிவர்களைச் சேவித்தும், ஆங்காங்கு சந்திக்கும் புண்ணிய நதிகளில் நீராடியும், வழிப்படுமாலயங்களைத் தொழுதும், எதிர்த்த மன்னவர்களைவென்றும், இவன் மாரனோ, இந்திரனோ, குபேரனோ, பரமசிவம் தானோ, சுந்தரத் திருமேனிவாய்த்த இக்கட்டழகன் கையிற்றாங்கிய சக்திக்கு நாமிரையாகுமுன், எல்லோருமொருமித்து இவனடிபணிந்து நேசிப்போமென்று அநேக காணிக்கை கப்பங்களை பாதங்களிற் சமர்ப்பித்து, விசுவசித்த மன்னர்களுடன் வெற்றிவேந்தனாய், ஹேமகூட மலைச்சாரலின் பக்கல் பச்சைப்பசேலென்று குளிர்ந்த ஓர் பூங்காவைக் கண்டு, அதன் சமீபத்திற்றங்கி, யிளைப்பாறி, தனக்கென்றியற்றிய கூடாரத்தில் தனது தோழனுடன் இனிது வீற்றிருந்தான்.

உலோகனாதனுடைய அருளால் உதித்தவனாதலால் இவனது பராக்கிரமம் மிகவுமற்புதமாய் வியக்கும்படிக்கேயிருந்தது. சக்தியின் மகிமையையும் வாளின் பிரகாசத்தையும் இக்குமாரர்களின் முகலாவண்யத்தையும் கெம்பீரமான பார்வையையும் பார்த்து, மற்ற மன்னர்கள், இரண்டு இளஞ்சிங்கங்களைக்கண்ட யானைகள்போல் பயந்து ஒடுங்கிப் போனார்கள்.

பிறகு சுந்தரன் சகல தேயத்தரசர்களையு மழைத்து, வருடந்தோறும் தனது இராஜ்யத்திற்குக் கப்பம் கட்டும்படிக்கும், அவரவர்கள் நாடுகளை நீதியாய்ப் பரிபாலிக்கும்படிக்கும் திட்டஞ்செய்தனுப்பிவிட்டான். பின்னுந்தன் சேனைகளுக்கெல்லாம் தலைமையானவனும் அறிவுடையோனும் சூரனும் பிதாவுக்கு மிக்கவன்பனும் சேனாதிபதியுமான விஜயன் என்பவனை அருகிலழைத்து, "நீ சகல பரிவாரங்களுடன் நம்மில்லஞ்சென்று, பிதாவின் கவலையைத்தீர்த்து, நமக்குக்கிடைத்த காணிக்கைகளையெல்லாம் தந்தையின் முன்னிலையில் செலுத்திப் பொக்கிஷஞ் சேர்ப்பிவித்து, உலகத்தில் நிகழுமின்னஞ் சில விநோதங்களைக் கண்ணுற்றுக்களித்து யான் சுகுணனுடன் சீக்கிரமே வருகின்றேன்" என்று தெரிவித்து நீயு மிக்க ஊக்கத்துடன், சுமந்திரருடன் ஒருமித்து, இராஜ காரியங்களில் யாதொரு குறைவுமில்லாது பாதுகாத்தல் வேண்டும்," என்றான்.

அப்பொழுது சுந்தரன், தனக்குந் தன்றோழனுக்கு மிரண்டு நல்ல குதிரைகளையும் வேண்டிய சில திரவியங்களையும் தங்க ளாயுதங்களையும் நிறுத்திக்கொண்டு, மற்ற எல்லாவற்றையும் விஜயனிடமனுப்பிவிட்டான்.

விஜயன் இளவரசனது ஆக்கினையை மேற்கொண்டு மாயாவதி நகரஞ்சென்று அரசன், அமைச்சன், தேவி இவர்கட்கு நிகழ்ந்த யாவற்றையுமுரைத்துக் களிக்கச்செய்து தானுந் தன் வேலையில் மிக்க ஊக்கத்துடனிருந்தான். சுகுணன்கூடவிருப்பதால் யாதுங்குறைவில்லையென்று எல்லாருந் தைரியமாயிருந்தார்கள்.

பிறகு சுந்தரன் சுகுணன், இவ்விருவரும் தன் பரிவாரங்களெல்லாம் பிரயாணமாகிப் போனவுடன், அப்பூங்காவின் விநோதத்தைக்கண்டுகளிக்க அதில் புகுந்து அதினமைப்பைப்பார்த்து, இது ஓர் அரசன் தன் விநோதார்த்தமாக இயற்றிய

உபவனமாக விருக்கவேண்டுமென் றாலோசித்து, தங்கள் குதிரைகளைக் கட்டத்தகுந்த விடந்தேடுகையில், அங்கோர் திவ்வியமான அழகிய பொய்கையைக்கண்டார்கள். அது அமைந்திருக்குஞ் சிறப்பும் விநோதமும் எவ்வண்ண மிருந்ததென்றால்,

"முளரி செங்குமுதநீல முண்டகங்குவளை வெள்ளை
இளர் நறுமலர்ச்செல்லாம் நிரையொடு மலியப்பூத்த
அளவிலா மதியுமீனு மருக்கரு மலியவண்ணம்
வளர் புவிதனினும் வேதாவகுத்தனன் போன்றவன்றே."

என்றபடி, அப்பொய்கையில், தாமரை செவ்வல்லி, நீலம், செந்தாமரை, கருங்குவளை, இன்னும் பல வெண்ணிறமான மணமிகுந்தகுஸுமங்களெல்லாம், அளவில்லாத சந்திரசூரியர்களும், நக்ஷத்திரங்களுமுள்ள ஓர் அதிசயமான ஆகாயத்தை மானிடர் வசிக்கும்படியான இவ்வுலகத்திலும் பிரம்மாவானவர் சிருஷ்டித்தது போலிருந்தது. அந்தப் பொய்கையின் கரையில் ஓர் இளமாமரத்தடியில் இரண்டு முளைகளையடித்து தமது பரிமாக்களைக்கட்டினார்கள். பின்பவர்கள் அவ்வுத்தியானத்தின் சிறப்பினை வர்ணித்துக்கொண்டு அதைச் சுற்றிப்பார்க்கச் சென்றார்கள்.

(இன்னும் வரும்.)

டி. எஸ். சுப்பராமய்யா.

---

PRACTICAL VEDANTA.

## அநுபவ வேதாந்தம்.

(ஸ்வாமி விவேகாநந்தா செய்த ஓர் உபந்யாஸம்.)

வேதாந்த சாஸ்திரத்தின் அநுபவபாகத்தைப் பற்றி சிறிது ப்ரஸங்கிக்கும்படி சிலர் கேட்டுக்கொண்டமையால் அதைப்பற்றி இப்பொழுது உபந்யஸிக்கின்றேன். வேதாந்தத்தை வாக்மாத்ரமாய் வியவஹரிப்பதன்றி, அதை அநுபவத்திற்கு எங்ஙனம் அமைப்பது என்பதும் யோசிக்கற்பாலது. அநுபவத்திற்குதவா எத்தகைய ஞானமும், யாதொருபயனையும் கொடுக்கத்தக்கதன்று. ஆதலால், வேதாந்தமானது, மதமாக ஆகவேண்டுமாயின், அநுபவபாகத்தைத் தன்னில் அதிகமாய்க் கொண்டிருத்தல் வேண்டும். அது நாம் ஒவ்வொரு விஷயத்திலும் அநுஷ்டிக்கத்தக்கதா யிருக்கவேண்டும். இதுமாத்திரமேயன்றி, மதத்துக்கும் லோகாசாரத்திற்குமுள்ள மாயாகல்பிதமான பேதத்தையும் ஒழித்தல் வேண்டும். ஏனெனில் வேதாந்தமானது எங்கும் ஏகீபாவத்தையே போதிக்கின்றது. மதத்தில் கூறப்பட்டுள்ள ஸகல அநுஷ்டானக்ரமங்களையும் சம்பூர்ணமாய் அநுஷ்டித்து நமது உலகவாழ்க்கை அவற்றின் மயமாகவே இருக்க முயலவேண்டும். இவ்வநுபவபாகத்தை நான் கிரமேண எடுத்துச்சொல்லுகின்றேன். ஆயினும் முதன் முதல் வேதாந்தத்தை நூல்வாயிலாக அறிந்து, பின்னர் அது அநுபவத்தில் எங்ஙனம் அமைகின்றதென்பதைப்பார்ப்போம். இச்சாஸ்த்ரமானது வனகுகைகளிலிருந்து படிப்படியாய் ஜனபாஹுள்யமான வீதிகளுள்ள நகரங்களுக்கு எப்படி சென்றது என்பதையும் பார்ப்போம். ஆனால் இதில் ஒரு விசேஷம் என்னவெனில் இவ்வேதாந்த விசாரங்கள் பெரும்பான்மையாய் வானப்ரஸதர்களினிடமிருந்துண்டாகாமல், அநேகவியாபாரங்களையுடைய சிம்ஹாஸநாதிபதிகளாகிய சக்கிரவர்த்திகளாலும் பிரகடநம் செய்யப்பட்டிருக்கின்றன.

தபோதனராகிய ஆருணியென்னும் முநிபுங்கவருக்கு சுவேதகேது என்றோர் புதல்வரிருந்தார். அவர் வனத்தில் வளர்ந்தவராயினும், அதை விட்டு நீங்கி பாஞ்சாலர்களின் நகரமடைந்து அங்கு அரசு புரிந்துகொண்டிருந்த ப்ரவஹணதைவலி என்னும் மன்னனை அணுகவும், அரசனுக்கும் அவருக்கும் பின்வருமாறு ஸம்பாஷணை நடந்தது.

அரசன்:—"மரணாநந்தரம் பிராணிகள் இங்கிருந்து எங்ஙனம் செல்லுகின்றன, உனக்குத் தெரியுமா?"

"எனக்குத் தெரியாது."

அரசன்:—"இங்கே எப்படித்திரும்புகின்றன தெரியுமா?"

"எனக்குத் தெரியாது"

"பிதிர்யாநமும் தேவயாநமும் உனக்குத் தெரியுமா?"

அரசன் வேறுகேள்விகளும் கேட்டார். அவற்றினுக்கு விடைபகர ஸ்வேதசகேதுவினாலாகவில்லை. ஆகையினால் அவனுக்கு ஒன்றும் தெரியாதென்று அரசன் சொல்லிவிட்டார். அச்சிறுவன் தன் பிதாவினிடம் திரும்பிவர அவரும் தனக்குத் தெரியவில்லையென்று சொன்னார். அவர் தம் குமாரனுக்கப் அவற்றைக் கற்பிக்கவில்லை யென்பதன்று ணரையும் னவெனில் அவருங்கூட அவை இன் மாத்திரந்தான் தெரியா. ஆகவே ஸ்வேதகேது த னை. இதனை லிவ

அரசனிடம் திரும்பிச்சென்று, இருவரும் அவ்விரஹஸ்யத்தைத் தங்களுக்குபதேசிக்கும்படி அரசனைக்கேட்டார்கள். இந்த ரஹஸ்ய தத்வசாஸ்த்ரமானது இதுவரையில் அரசர்களுக்குள்ளேயே வழங்கிவந்ததென்றும், விப்ரர்களுக்கு அது தெரியாதென்றும் சொன்னர். ஆயினும், அவ்வரசர், அவற்றைப் பற்றித் தமக்குத் தெரிந்தவற்றை அவர்களுக்குபதேசிக்க வாரம்பித்தார். வேதாந்த ஸாஸ்த்ரமானது அரண்யங்களில் வசித்த தியாகயோக நிரதர்களான ரிஷிகளினுல் மாத்திரம் வளர்க்கப்பட்ட தன்றெனவும், அதின் வெகு சிறந்த பாகங்களெல்லாம் லௌகவ்யவஹாரங்களில் அதிகமாய்த் தலையிட்டுக்கொண்டிருந்த மேதாவிகளாலும் விர்த்திசெய்யப்பட்டு வந்ததென்றும் ஏற்படுகின்றது. கோடிக்கணக்கான ஜனங்களை நிரங்குசர்களாய் ஆளும் ஏகசக்ராதிபதியைவிட அதிகமான லோகவியவஹாரங்களுள்ள மனிதனை நம்மனதால் நினைப்பது கடினம். ஆயினும் இச்சிம்ஹாஸனாதிபதிகள் மஹா ஆழ்ந்த விசாரணை கர்த்தர்களாகவு மிருந்திருக்கின்றனர்.

ஆகையால் எவ்விதத்திலும் இவ்வேதாந்தமானது அநுபவஸாத்யமென் றேற்படுகின்றது. மேலும் வேதாந்தசாஸ்த்ரத்திற்கு ஓர் சிறந்த வ்யாக்யானமெனத்தகும் பகவத் கீதையை நோக்குமிடத்து யாவரும் ஆச்சரியப்படும்படியாய் உபதேச ஸ்தானமானது குருக்ஷேத்திரத்தில் அமைந்துள்ளது. அவ்விடத்தில் தான் ஸ்ரீகிருஷ்ணன் இச்சாஸ்த்ரத்தை அர்ஜுனனுக்கு உபதேசித்தார். கீதையின் ஒவ்வொரு பக்கத்திலும் ஜ்யோதிர்மயமாய்ப்பிரகாசிக்கும் கருத்தென்னவெனின் இடைவிடாது கர்மத்தைச்செய்ய வேண்டுமென்பதே, ஆயினும் அங்ஙனம் சொல்லப்படுவதின் மத்தியிலேயே நித்யமான நிஷ்கர்மத் தன்மையும் சொல்லப்பட்டிருக்கின்றது. இதுதான் கர்மத்தின் ரஹஸ்யமென்று சொல்லப்படுவது, இதையடைவதே வேதாந்தத்தின் முக்கிய கருத்தாம். நிஷ்கர்மத்தன்மை (நைஷ்கர்ம்யம்) என்முல் செய்வனவற்றைச் செய்யாது சோம்பற்றனமாயிருப்பதென்று பொருளல்ல, அது வேதாந்தத்தின் கருத்துமாகாது. அஃதங்ஙனமேல், நம்மைச்சுற்றியுள்ள சுவர்கள் அறிவில் சர்வஸ்ரேஷ்டமாகும், ஏனெனில் அவைகளும் யாதொன்றும் செய்யாதிருக்கின்றமையாலென்க. மண்கட்டிகளும், மரத் தூண்களும் உலகத்தில் மஹாஜ்ஞானிகளாய்விடும்: அவைகளும் தொழிலற்றிருக்கின்றமையான். காமக்ரோதாதிகளுடன் கூடிச்செய்யும் கர்மமும் நற்கருமமாகாது. அயலில் எது நடப்பினும் யாதையும் கவனிக்காது நிச்சலமான மனதுடன் செய்யப்படும் கர்மமே வேதாந்தத்தின் பரமார்த்தமாகிய உண்மைக் கர்மமாம். இவ்வித மனச்சார்புடன் செய்யப்படும் கர்மந்தான் சிரேஷ்டமானதென்று நமக்கு அநுபவ பூர்வகமாய்த் தெரிந்திருக்கின்றது.

யாதொரு கருமத்தைச் செய்வதற்கும் நமக்குப் பொதுவாய் உண்டாகக்கூடிய மனவெழுச்சி முதலியன வுண்டாகாவிடின், நாம் எங்ஙனம் எக்கருமத்தையேனும் செய்யமுடியும் என அடிக்கடி கேட்கிறார்கள். நானும் அநேகவருஷங்கள் அப்படியே நினைத்தேன். ஆனல் எனக்கு வயதும் அநுபவமும் அதிகரித்து வரவர, அது உண்மையல்லவென்று தெரிந்துகொண்டேன். காமாதி மனவெழுச்சிகள் எவ்வளவுக் கெவ்வளவு குறைகின்றனவோ, அவ்வளவுக்கவ்வளவு, செய்யப்பட்ட காரியம் சிரேஷ்டமாகின்றது. நமது மனதை இஷ்டம்போல் செல்லவிடுப்போமாகில், நமது சக்தி குன்றி, நரம்புகள் பலஹீநமுற்று, மனம் சஞ்சலமடைந்து கடைசியில் ஒரு காரியமும் ஆகாமற்போகின்றது. கர்மரூபமாய் மாறவேண்டிய சக்தியானது மனோவிகார ரூபமாய் பரிணமிக்கின்றமையால், அவ்வளவு சக்தியும் பயனற்றதாய்ப் போய்விடுகின்றது. மனது அமைதியாயும் ஒரு நிலைப்பட்டும் இருக்கும்பொழுதுதான் அவ்வளவு சக்தியும் பிரயோஜநம் பயக்கும். கருமம் செய்வதில் பயன்படுகின்றது இவ்வுலகத்தை யலங்கரித்த மஹா புருஷர்களின் சரித்திரத்தை நாம் கவனிக்கும் பக்ஷத்தில், அவர்கள் மஹாசாந்தமுள்ள மனோநிலைமை பெற்றவர்களென்று தெரியவரும். யாதொரு முகாந்தரத்தினுலும் அவர்கள் பின்வாங்குபவர் அல்லர். ஆகையினுலே தான், கோபாவேசமுள்ளவன் அதிகம் செய்யாதிருத்தலும், எப்பொழுதும் கோபங்கொள்ளாதவன் அதிகமானகாரியம் செய்யச் சக்தி உள்ளவனுயிருத்தலும் நிகழ்வது. கோபம், துவேஷம், அல்லது வேறெவ்வித மனோவிகாரத்துக்கும் இடங்கொடுக்கிறவன் இவ்வுலகத்தில் யாதொரு பெரியகாரியத்தையும் செய்து முடிக்கச் சக்தியுள்ளவனுகான். அதிகமானவேலையைச் செய்பவன்யாரெனில், சாந்தமும், க்ஷமையும் நிச்சலமுமுள்ள மனதையுடையவனேயாம்.

வேதாந்தமானது பாரமார்த்திகத்தை முக்கியமாய் வியவஹரிக்கின்றது. ஆனல் பாரமார்த்திகம் வியாவஹாரிகத்தை விட மேற்பட்டதென்பது நாம் எல்லோரும் அறிந்தது. இவ்வுலகத்திலுள்ள நமக்கு இரண்டு குணங்கள் ஸஹஜமாயமைந்திருக்கின்றன. அவற்றுள் ஒன்று பரமார்த்திகத்தை வியாவஹாரி

கத்தோடு சேர்த்து ஒன்றுபடுத்துவதற்கும், மற்றொன்று வியாவஹாரிகத்தை பாரமார்த்திகத்துடன் சேர்த்து ஒன்றுபடுத்துவதற்கும் முயல்கின்றன. இதை அறிந்துகொள்வது மிகவும் கடினம் நான் ஏதோ ஒரு விதமான வேலையைத்தான் செய்யமுடியுமென்று நினைக்கிறேன். ஒருவேளை அவ்வேலையின் முக்கால் பங்கு கெட்டதாயிருக்கக் கூடும், அல்லது எனது கோபம் துவேஷம், தன்னயம் முதலியவற்றின் பயனும் இருத்தல் கூடும். ஆகவே, யாரேனும் ஒருவன் எனக்கு ஓர்வித சித்தாந்தத்தையெடுத்துப் போதிக்கவருவானேல், அவன் முதல் முதல் சுயநயத்தை ஒழித்தவனாயிருக்கவேண்டும். அது அசாத்தியமென நான் நினைக்கின்றேன். ஆனால் ஒருவன் என் சுயநலத்துக்கும் தௌஷ்டியத்துக்கும் பொருந்தியிருக்கும் ஒரு ஸித்தாந்தத்தையெடுத்து எனக்குச்சொல்லும் பக்ஷத்தில், உடனே எனக்கு ஆநந்தம்பொங்கி, அச்சித்தாந்தத்தை ஆமோதித்துவிடுகிறேன். அதுவே எனக்கேற்ற சித்தாந்தமெனவும் கொண்டுவிடுகிறேன். இப்படியே வியாவஹாரிகமும். எதை வெகு சுலபமாய்ச் செய்து முடித்துவிடலாமென்று நான் நினைக்கிறேனோ, அது உலகத்தாருக்கும் அவ்வாறே தானிருக்குமென நினைத்தல் சகஜமாயிருக்கிறது. நான் கடைக்காரனாயிருந்துவிடும் பக்ஷத்தில், இக்கடை வியாபாரமே உலகமுழுமைக்கும் சுலபமாய் அநுஷ்டிக்கக் கூடியமதம் என்று நினைத்துவிடுகிறேன். நான் திருடனாயிருக்கும் பக்ஷத்தில், திருட்டுத்தொழிலே உலகத்தில் சிரேஷ்டமானமதமென்றும், மற்றையவெல்லாம், அங்ஙனமல்லவெனவும் நினைத்துவிடுகிறேன். இதனால் நமது நிலைமைகளுக்கும் சந்தர்ப்பங்களுக்கும் ஏற்ப, எதெது சாத்தியமாயும் சுலபமாயும் நமக்குத்தோன்றுகின்றதோ, அது அதுவே சர்வசிரேஷ்டமென்றும் சர்வசாத்தியமென்றும் கொள்கின்றோமென ஏற்படுகிறது. இனி வேதாந்தக்கொள்கையினைக் கூறுவேன். அதில் அசாத்தியமான பாகமொன்றுமிலதாயினும், அதன் இயல்பு பாரமார்த்திகத்தையே எப்பொழுதும் ஒட்டி நிற்பதென்றுணர்க. அது கூறும் சித்தாந்தம் எவ்வளவு உயர்ந்ததாயினும், அசாத்தியமானதன்று. சுருங்கச்சொல்லில், அது கூறும் சித்தாந்தமாவது "தத்வம் அஸி" "நீ அதுவாய் (கடவுளாய்) இருக்கிறாய்" என்பதே. வேதாந்த சாஸ்திரத்தின் பரமசித்தாந்தம் இதுவே. அநேகசா
கோபசாகைகளாயும் வாதரூபமாயும் பிரிந்து கிடக்கும்.]
கும் வேதாந்தத்தின் முடிவான சித்தாந்தம் எவ்
வெனில் ஆத்மா தூய்மையும் முற்றுணர்வுமுடை

அதனிடத்தில் ஜனனமரணங்கள் வெறுங் கற்பனையேயன்றி உண்மையல்லவென்பதாம். ஆத்மா என்றும் பிறப்பிறப்பற்றது ; ஆகவே நான் சாவேனென்பதும் அதற்காக நான் பயமுறுவதும் வெறும் மூடத்தனமேயாம். அவ்வாறே இதை என்னால் செய்யமுடியும், இதை என்னால் செய்யமுடியாது என்பனவும் மூடத்தனமே நான் எல்லாவற்றையும் செய்யவல்லேன். ஜனங்கள் தங்களிடத்திலுள்ள சக்தியை முதல் நம்பவேண்டுமென்று வேதாந்தம் கற்பிக்கின்றது. தனக்குப் புறம்பான சகுணமூர்த்தியினிடத்தில் நம்பிக்கை யற்றவன் நாஸ்திகன் என சில மதங்கள் கூறுவதுபோல, தன்னில் நம்பிக்கையற்றவனை நாஸ்திகனென வேதாந்தம் சொல்லுகின்றது. உனது ஆத்மமகிமையை நீ அறியாமலிருப்பதே நாஸ்திகமென வேதாந்தம் மொழிகின்றது. இவ்வெண்ணம் அநேகருக்கு விபரீதமெனத்தோற்றலாம் ; இது ஒருபோதும் கைகூடாது என்றும் நம்மில் பெரும்பான்மையோர் நினைக்கக்கூடும் ; ஆனால் ஒவ்வொருவரும் அதைச் சாதிக்கக்கூடுமென்றே வேதாந்தம் மொழிகின்றது. ஆணென்பதும் பெண்ணென்பதும் குழந்தையென்பதும் ஜாதிபேதமென்பதும், ஆத்மசாக்ஷாத்காரத்திற்கு இடையூறாயிருக்குமெதுவும் இல்லை: அதாவது பொய்யென்பதே அதன் துணிபு. ஏனெனில் ஆத்மாவானது என்றும் இவ்வித விகாரங்களின்றி ஆநந்த ரூபமாயிருக்கின்றமையாலென்க.

பிரபஞ்சத்திலுள்ள சர்வசக்தியும் நம்முடையதே. நாம்தான் நம் கண்களுக்கு முன் கைகளால் தடவிக்கொண்டு இருட்டாயிருக்கிறதெனக் கத்துகிலக
நம்மைச்சுற்றிலும் இருள் என்பது இல்இதனை
அறி. கைகளை எடுத்துவிடு, பிறகு ஆம். போக
கும் பிரகாசம் விளங்கும் இவிரும்பிப் ப
தில்லை ; துர்ப்பலம் என்ருத்திற்கு மகட்
மூடர்கா எண்ணமென்றுஞ் செய்ர், தகப்
று லென்னபயன், எண்ண நானுரையும்
றுமானலது பொய்ப்பதா மாத்திரந்தான்
செய்வார்க்கு மெய்ப்னேன். இதனை விவ

## சுகாதாரக்குறிப்புகள்.

### தண்ணீர் வடிக்கட்டல்.

சென்னையில் விஷபேதி அதிகமாகப் பரவியிருப்பதால் ஜனங்கள் அந்த வியாதியால் பிடிக்கப்படாமலிருக்க வெகு ஜாக்கிரதையாக விருக்கவேண்டிய தவசியமாயிருக்கிறது. இத்தருணத்தில் சென்னை முனிஸிபாலிடி ஹெல்த் ஆபீஸார் தண்ணீர் வடிக்கட்டும் கருவிகளைப் பற்றியும் பால் கெட்டுப்போகாமல் காப்பாற்றப்பட வேண்டியதைப்பற்றியும் இங்கிலீஷில் ஒரு குறிப்பெழுதிப் பிரசுரித்திருக்கிறார்கள். தண்ணீர் வடிக்கட்டுவதின் நோக்கம் தண்ணீரிலுள்ள மாசுகளும் அதிலுள்ள அணுப்பிரமாணமான பூச்சிகளும் நீங்கவேண்டுமென்பதே. இவற்றை நீக்காமல் தண்ணீரைப் பானம்செய்தால் வியாதிகள் உண்டாவதாய் வியாதி வித்துக்களை நீக்கித் தண்ணீரை சுத்திசெய்து பானம் பண்ணவேண்டுமென்பதாம். இதற்காக தண்ணீர் வடிக்கட்டுவதற்காக வீடுகளில் உபயோகிக்கும் வடிக்கட்டும் கருவிகளும், ஷாப்புகளில் விற்பவைகளும், தண்ணீரிலுள்ள வியாதிவித்துக்களை நீக்குவதற்கு பதிலாக அவை விர்த்தியாவதற்கு அனுகூலமாக விருக்கின்றனவென்று ஹெல்த் ஆபீஸார் கண்டுபிடித்திருக்கிறார்கள். Animal Charcoal, carbom, Sponge, இவை போன்ற வஸ்துக்களைக்கொண்டு தண்ணீர் வடிக்கட்ட அமைத்திருக்கும் கருவிகள் இந்தவியாதி வித்துக்களை நீக்குவதற்கு பதிலாக இவை பல்கிப் பெ[illegible]வதற்குச் சாதகமாயிருப்பதால் அவைகளை [illegible]த்தல் கூடாதென்கிறார்கள். ஏனெனில் [illegible]லை கொண்டு வடிக்கட்டின தண்ணீரில் விஸ்த[illegible]ர் துக்கள், வடிக்கட்டாத தண்ணீரி விளையாட்டு[illegible]க்கு ஜாஸ்தியாக விருக்கின்

சும் புலாமய[illegible]
உருவெளியாகத்[illegible]வைத்து
உயரவிளங்கும் சந்தி[illegible]

* சந்திரன் இங்கே ம[illegible]
சத்தில் பிரகாசிக்கிறத[illegible]

இரண்டு சட்டிகளிலும் 8-அங்குல அளவுக்கு மணல் கொட்டி அதன்மேல் தண்ணீர்விட்டு வடிக்கட்டவேண்டும். இப்படி வடிக்கட்டுவதில் முதல் மூன்று நாளும் வடிக்கட்டின தண்ணீரை யுபயோகிக்கக் கூடாது. ஏனெனில் மணலினுலேயே தண்ணீர் வடிக்கட்டப்படுவதில்லை. அந்த மணலின்மேல் தண்ணீரிலுள்ள வண்டல் படிந்து அதனுல் தண்ணீரிலுள்ள மஷ்டுகள் வியாதிவித்துக்கள் கீழேவடியும் தண்ணீரில் சேராதபடி நீக்கப்படுகின்றன. இப்படி ஒருதரம் போட்ட மணலை ஒரு மாசம் வரையில் கலைக்காமல் வைத்துபயோகிக்கலாம். தினம் புதிதாகத் தண்ணீர் விடும்பொழுது மணல் கலைந்து போகாமல் ஜாக்கிரதையாக விடவேண்டும். ஒரு மாசமானபின் அந்த மணலைச் சுத்திபண்ண, அதை மூன்றுதினம் அடுத்தடுத்து ½-மணிநேரம் தினம் அடுப்பில்வைத்துத் தண்ணீர்விட்டு நன்ருகக் கொதிக்கக் காய்ச்சல்வேண்டும். இப்படிக் காய்ச்சுவதால் அதில் படிந்துள்ள வியாதி வித்துக்கள் மடிந்துபோகின்றன. இந்தச் சட்டிகளில் புழுதிபடியாதபடி நன்ருக மூடிவைத் துபயோகிக்கவேண்டும். தண்ணீரைக் கொதிக்கவைத்து அப்புறம் வடிக்கட்டுகிருர்கள். இப்படிச் செய்வது சரியல்ல. முதலில் வடிக்கட்டிப் பிறகு வடிக்கட்டின தண்ணீரைக் கொதிக்கவைக்கவேண்டும். கொதிக்கவைத்த தண்ணீரை நீடித்துவைத்திருப்பது கூடாது. ஏனெனில் காற்றிலுள்ள மஷ்டுக்கள் வியாதி வித்துக்கள் கொதிக்கவைக்காத தண்ணீரைவிட கொதிக்கவைத்த தண்ணீரை சீக்கிரம் கெடுத்துவிடுகிறது. ஷாப்புகளில் விற்கும் தண்ணீர் வடிக்கட்டும் கருவிகளில் (Filters) இரண்டு மிகவும் நம்பத்தக்கனவாக விருக்கின்றனவென்று சொல்கிருர்கள். அவை; (1) The Berkefeld, (2) The Pasteur Chamberland என்னும் பேர்வாய்ந்தவைகள். இவற்றை யுபயோகிப்பதிலும் அதிக ஜாக்கிரதையாக விருக்கவேண்டும். இக்கருவிகளின் வடிக்கட்டும் பாகங்களை நாலு நாளைக் கொருதரம் நன்ருகக் கழுவி தண்ணீரில் கொதிக்கவைத்து சுத்திசெய்யல்வேண்டும். இல்லாவிட்டால் இப்பாகங்களில் வியாதி வித்துக்கள் பல்கிபெருகி இதுமூலமாக வடியும் தண்ணீரிலும் [illegible] காணப்படுகின்றன.

### பால்.

சௌக்கியம் பொருந்திய நல்ல பசுவின் மடியிலிருந்து கறக்கப்பட்ட பால் கெடுதி செய்வதில்லை. பசு சௌக்கியம் பொருந்தியதா யிருப்பதோடு அதன் மடி ம் முலைக்காம்பும் அழுக்கின்றிச் சுத்தமாயிருக்கவேண்டும். பால் கறப்பவன் கைகளும் பாத்திரமும் சுத்தமாகவிருக்கப் பார்க்கவேண்டும். பாலைக் கெட்டுப்போகாமல் காப்பாற்றுவது கஷ்டம். ஏனெனில் அது புஷ்டிசத்து அதிகமாகவுடையதாகவிருப்பதால் வியாதி வித்துக்கள் அதில் வெகு சீக்கிரத்தில் படிந்து பல்கிப்பெருகி அதைக் கெடுத்துவிடுகின்றன. இத்தேசத்தில் வாயுவின் உஷ்ணத்தினல் இவ்விதக்கேடு ஜாஸ்தியாக நேரிடுகின்றபடியால், பால் கெட்டுப்போகாமலிருக்க பனிக்கட்டியில் குளிர்ச்சியுண்டாகும்படியாக வைத்திருக்கவேண்டிய தவசியமாயிருக்கிறது. இல்லாவிடில் கறந்தபால் கறந்த நிமிஷம்முதல் மணிக்குமணி கெட்டுப்போகிறது. சில மணிநேர[illegible] பாலைப் பிந்தி நன்ருகப் பொங்க[illegible] அதிலுள்ள கெடுதி முற்றும் நீ[illegible] ஏனெனில் காய்ச்சினதினல் அதிலுள்[illegible] வித்துக்கள் மாண்டுபோனுலும் அவற்றிலிரு[illegible] டான மஷ்டுக்கள் நீங்காமலிருப்பதால் அவை[illegible] கொண்டவிடத்து வயிற்றில் சங்கடமுண்டுபண்[illegible]கின்றன. விசேஷமாய் குழந்தைகளுக்கு இதனல் குடல்நோய் உண்டாகின்றது. ஆகையால் பாலைக் கெடுதலின்றி உபயோகிக்கவேண்டுமானல் பசு வியாதியற்றிருப்பதோடு, அதன் அங்கமும் மடியும் சுத்தமாகவிருக்கவேண்டும். அப்படியே பால் கறப்பவனும் பாத்திரமும் சுத்தமாகவிருக்கவேண்டும். இவற்றோடு பாலில் கெட்ட தண்ணீர்விட்டு கலக்காமலும் பார்த்துவரவேண்டும். அன்றி கறந்து சில மணிநேரமான பாலை உட்கொள்ளல்கூடாது.

---

## சிறுவர்க்கான பக்கம்.

[விவேகசிந்தாமணியை வாசிக்கும் சிறுவர் சிறுமிகளுக்காக எழுதப்பட்டது.]

---

### ஒரு போலிப்பக்தன் கதை.

சென்ற சஞ்சிகையில் மெய்ப்பக்தனுகிய ஹனுமார் அல்லது ஆஞ்சநேயமூர்த்தியின் குணங் குறிகளைக்காட்டி மெய்ப்பக்தன் எப்போதும் தான் பக்திசெலுத்துபவர் அன்பில் மூழ்கி அவர் அருளே தனக்குப் பெரும் பாக்கியமன்றி வேறெதையும் பொருட்டாக எண்ணுனென்பது விளக்கிக் காட்டப்பட்டது. இப்பொழுது போலிப்பக்தன் எப்படியிருப்பான் என்பதை ஒரு கதையினல் விளக்கிக் காட்டுவோம்;—

[திருவாசகமென்னு நூல் கருங்கன் மனத்தையுகொருங்கப்புரியும் அன்புறு மொழிகளாலமைக்கப்பெற்று வைராக்கியதீபமாக விளங்குவது. உலக போகங்களை வெறுத்த மோக்ஷகாமிகளே இதனை விரும்பிப் பாராயணஞ் செய்தல்வேண்டும். போககாமிகளான கிரகஸ்தர்கள் இதனை விரும்பிப் ப[illegible] யணஞ்செய்தல் அவர்கள் கருத்திற்கு[illegible] செயலாகும். எண்ணமொன்றுஞ் செய்[illegible] றுமானு லென்னபயன், எண்ண[illegible] லொன்றுமானலது- பொய்ப்பச்[illegible] பக்தி செய்வார்க்கு மெய்ப்[illegible]திக்கும்.] [illegible]ஏகே [illegible]று கேட் [illegible]முவன், தகப் [illegible]ரம் நானுரையும் [illegible]ரன் மாத்திரந்தான் [illegible]தினுன். இதனு விவ

...தில் தனிகனுன ஒருவனிருந் ...க்குள் தன்னைப் பிறர் யோக்கிய ...சயலுடையவன், தெய்வபக்தியு ...ன, தான தரும பரோபகாரங்களை ...யவனென் றெல்லாங் கருதவேண்டு ...மன்னும் ஒரு பெருத்த எண்ண மூண்டாயி ருந்தது. அதனை நிறைவேற்றிக்கொள்ளும் பொருட்டு தன்னூரிலுள்ள சிவன்கோவி லுக்குச் சில தருமங்களைச் செய்வான் உத்தே சங்கொண்டு அருச்சனைக் கட்டளையமைத்து நித்தியம் தன் வேலைகளெல்லா மாயின பின் னர் சுவாமி தரிசனார்த்தம் விபூதி ருத்திராக்ஷ தாரியாய் கோவிலுக்குள் இரவி லொன்பது மணிக்குமேற் போவான். சென்றால் நமஸ் காரம் செய்யவேண்டு மிடங்களிலெல்லாம் சோம்பலின்றி விழுந்து விழுந்து நமஸ்கரித்து எழுந்துநின்று சம்போ மகாதேவா என்று பெருங் கூச்சலிடுவான். பெருங்கூச்ச லென் றாலது பேரிடி யிடித்ததுபோன்றிருக்கும். ஒவ் வொரு தொனியிலும் இவன் கூச்சலைக்கேட்டுக் கர்ப்பிணிகள், குழந்தைகள், பேதையர்களாதி யர்கள் உடனடுக்கமடைந்து பயமடைவார் கள். கடைசியாக ஒவ்வொரு சுவாமியினெ திரிலும் பத்துப் பதினைந்து பாடல்களுக்குக் குறையாம லுளறுவான். அது சிறிய கிராம மாதலாலும் இவனொருவனே அந்த கிராமத் திற்கு தனிகனாக வுள்ளவனுதலாலும் கோவில் தருமகர்த்த னாதலாலும் இவன் கோவிலுக்கு வெளியில் வருகிறவரைக்கும் குருக்களுக்கு கோவிலைப் பூட்டிக்கொண்டு வீட்டிற்குப்போக வழியில்லை. மூலஸ்தானத்திலுள்ள சிவலிங் கத்திற்கும் உமையவளுக்கும் நித்தியம் அர்ச் சனை நடத்தல் வேண்டும், அதுவும் இவனெ திரே இருக்கும்பொழுதுதான் செய்தல்வேண் டும். இதனால் குருக்களுக்கு வெகு சங்கடம். வேறு வேலைக்காரர்களுடைய கோவிலுமல்ல. பெருக்குதன்முதல் தீபாராதனை செய்யும் பரி யந்தமுள்ள எல்லா வேலைகளும் குருக்கள் தான் செய்தல்வேண்டும். வெகு கஷ்டம். இப்பணக்காரன், சூரிய னுதிக்கத்தவறினுலுந் தவறுவான், இவன் கோவிலுக்குவரத் தவறு கிறதில்லை. இவனுக்கு இதனால் பிற்பகலி லுண்ட உணவு சீரணமாகிறதான ஒரு சுகமு ளது. குருக்களுக்கோ பசிப்பிணி வருத்த மதி கமாக வந்து வருத்துவது நாளும் நாளும் வழக்கம். வீட்டிற்குச்சென்று குருக்கள் போசனஞ்செய்து உறங்கும்பொழுது மணி இரண்டிற்குக் குறையாது. இதனு லிவனு டைய வருகையை ஒழிக்கவேண்டுமென்று ஒரு அபிப்பிராயங்கொண்டான். கொண்டு தன் மகனான சிறுவனொருவனை யழைத்து அடே நாளை ராத்திரி நீ கோவிலிலே இரு. நான் சுவாமி பின்னுலே ஒளித்திருந்து அந்தப் பணக்காரப் படுபாவியை இனி கோவிலுக்கு வாராதவண்ணமாகச் செய்கிறேன் என்று கூறி மகனுக்குச் செய்யவேண்டிய ஏற்பாடுகளனைத் தையும் செய்துவிட்டு காலையிலெழுந்து அடுத் தகிராமத்திற்குச் சென்று, அந்த ஊரிலுள்ள கூத்தாடி வண்ணானொருவனிடம் நுணக்க மரத்தினாலும், கலியாணமுருக்கமரத்தினாலும் செய்யப்பட்டுள்ள வேஷ சாமான்களை வாட கைக்குவாங்கி ஒருவருக்குந் தெரியாமல் கோவில் மூலஸ்தானத்தில் சிவலிங்கத்தின் பின்புறத்திற் பத்திரப்படுத்தி வைத்துவிட்டு விளக்குவைத்ததே முகத்தி லரிதாரப்பூசி வேஷ சாமான்களால் அலங்காரம்செய்து கொண்டு சுவாமியின் பின்புறத்திலேயே காத் துக்கொண்டிருந்தான். அன்றையதினம் அக் கிராமத்தான் எதுவோ அசந்தர்ப்பத்தால் பதி னொருமணிக்குக் கோவிலுக்கு வந்தான். வந்து வழக்கம்போல செய்யவேண்டிய வேலைக ளனைத்தையும் செய்துகொண்டு மூலஸ்தா னத்தி னெதிரே சென்று இரண்டு கைகளையுந் தலைமீது குவித்துக்கொண்டு ஹரஹர சம்போ

மஹாதேவா என்று பெருங் கூச்சலிட்டுச் சுற்றிப்பார்த்தான். உடனே கையிலேந்திய தாம்பாளத்துடன் சிறுவ னெதிரே தோன்றினன். அவனைப் பார்த்தவுடன் அதிகாரத்தோடும் ஏ சாமி! குருக்களெங்கே என்றான்.

அவன்.—'எங்கப்பா ஆ பக்கத்தூரு சாமிக் குருக்களிருந்தாரே அவர் வீட்டு மாப்பிளேக்குத் தெவசமாம். அதற்கு பிராமணார்த்தத்திற்குப் போயிருக்கா. நாளேக்கு வருவா' என்றான்.

இவன்.—சரி உனக்கு மந்திரந்தெரியுமோ?

அவன்.—ஐய மீன்குஞ்சிற்கு நீந்த ஒருவர் கற்றுக்கொடுக்கவேணுமா, அதுபோல எனக்கும் மந்திரந் தெரியுமென்றான்.

இவன்.—"ஆனற்சரிபோ; அர்ச்சனேக்குவேண்டியவைகளே எடுத்துக்கிட்டுவா" என்று கூறி சங்கற்பார்திகளேச் செய்துவிட்டுச் சிறுவன் அருச்சிக்கத் தானெதிரேநின்று சிவபெருமானேப்பார்த்து "என்னுண்டவனே இந்தத் தொல்லேயிலிருந்தென்னே எப்பொழுதுநின் திருவடிக்காளாக்குவாய் இன்னந் தாமசமா தயாநிதே இந்தப்பாழு நரகக்குழியிலே ஆரிருப்பார்கள். உன்னேத் தயாநிதியென்கிறார்களே என்னேச் சிக்கிரம் ஆட்கொண்டு ரக்ஷிக்கவேணும்" என்று உளறிவிட்டு இருவிழிகளேயுஞ் சிறிது மூடித்திறந்து திருவாசகத்தில் உள்ள,

"உற்றாரை யான்வேண்டேன் ஊர்வேண்டேன்
கற்றாரை யான்வேண்டேன் கற்பனவு மினிதமையும்"

என்று திருப்பித் திருப்பி இரண்டு கைகளேயும் விரித்து நீட்டியும் தலேமீது வைத்தும் பாடிப்பாடி ஒருகாலே மடித்துக் கொண்டு கூத்தாடிக்கூத்தாடி எதிரில் நின்றான். குருக்கள் இதுதான் தருணமென்று சிவலிங்கத்தின் தலேயோரமாக ஒருகையைநீட்டி வாவாவென்று கைச்செய்கை செய்தனன். இதனேக்கண்ட அக்கிராமாதிபன் உள்ளத்திற்சிறிது பயத்துடன் சிறிதே பின்னிடைந்து, 'சுவாமிஇ! அதென்னங்கே பாம்பாட்டமாத் தெரியுதே சாமி கிட்டெ' என்றான்.

அதற்குக் குருக்கள் சிறுவன் எனக்கொன்றுந் தெரியல்லே என்றான். உடனே பின்னடைந்தவண்ணமே பாடத்துவக்கினன். உடனே குருக்கள் சிறிது தலேயை நீட்டி வா தருகிறேனென்று உரத்த குரலா லழைத்தான். இவ்விந்தையைக்கண்ட மற்றையோன் நாமொருவேளே ஓடிவிது நம்மைத் தொடருமோ இங்கு நின்றால் நம்மை வாவென்றழைக்கிறதே தெய்வம் இப்படி வெளிப்படுமென்று தெரிந்திருந்தால் எங்கப்பாணே நானுள்ளே வரமாட்டேனே. என்னமோ பார்க்கலாம், பாட்டைவிடக்கூடாதென்று பின்னும் உற்றாரை யான், வேண்டேனென்று பாடினன். பார்த்தான் அவன்: இப்படிச் செய்தால் போகமாட்டானென்று நன்றாய் இலிங்கத்தின் பின்புறமாக நிமிர்ந்து நின்றான். நின்று, அடே இதோ உனக்கு மோக்ஷங்கொடுக்கப்போகிறேன் இங்கே என்னருகில் வாவென்று உரக்கக் கூவினன்.

அப்பொழுதிவன் 'ஐயா சின்னசாமி! அங்கே யாரென்னேக் கூப்பிடுகிறது' என்று கேட்டான். அதற்குக் குருக்கள் சிறுவன், தகப்பன் சொல்லிவைத்த வண்ணம் நானாரையும் பார்க்கவில்லேயே இங்கே நான் மாத்திரந்தான் நிற்கின்றேன் என்று கூறினன். இதனு லிவ

னுக்கு மிகுந்த பயமுண்டாகி "நமக்கென்ன குறைவென்று மோக்ஷமடையப்பார்க்கிறது: இன்னம் என் பெண்சாதி மெத்தச்சிறியவள், பயல்களும் சிறியவர்கள்; இன்னம் நாப்பது வருஷத்துக்குக் குறையாம லிங்கே இருக்க லாம். கோவிலுக்கு வந்தது மோசமாச்சு. இனி நாமோடவேண்டியதுதான்" என்று தந்திரமா கவே எதிர்முகமாக விரைந்து வருவான் கரு தினன். இதுகண்ட குருக்கள் இந்தா மோக்ஷம் போகாதே, போகாதே, நில், நில் என்று உரக்கக் கூவிக்கொண்டு இலிங்கத்தின் தலையில் கை வைத்துத் தடாலென்று குதித்துக் காலிலும் இடுப்பிலுங் கட்டியிருந்த பெருஞ் சதங்கைகளைக் கலகலவென்று ஆட்டினன். ஆட்டவே சுவாமிதா னென்று இவன் பயந்து ஆ ஆ பாழுங் கோவிலுக்கேன் வந்தோமென்று ஒரே ஓட்டமாக ஓடிப்போய்விட்டான். இக் குருக்களும் "இந்தா மோக்ஷம் பிடி பிடி போகாதே போகாதே நாளைக்கு வந்தால் தரமாட்டேன்." என்று கூவிக்கொண்டு பின்றொடர் பவனைப்போல அபிநயித்துச் சிறிது தூரம் ஓடினன். என் பொண்டாட்டி பிள்ளைகளை விட்டுவிட்டு நான் மோட்சத்திற்கா வரவென்று அதிக விரைவாக வீட்டிற்குள் நுழைந்து கதவினைப் படீரென்று சாத்திக்கொண்டான். சாத்திக்கொண்ட பின்பு இனி நஞ்சள்ளையொழிந்ததென்று அன்றிராத்திரியிலேயே வேஷ சாமான்களை வண்ணானிடங் கொண்டு கொடுத்துவிட்டு ஊரினின்றும் வருபவனைப்போல மறுநாட் காலையில் கிராமாதிபன் வீட்டிற்கு வந்து "நான் நேற்றில்லை; மன்னிக்க வேண்டும்" என்றான். இவனைக்கண்டவுடனே மிகுந்த பயத்துடன் ஐயா கோவில்சாமி கொஞ்சம் உக்கிரமான சாமிதானே என்று கேட்டான். அதற்குக் குருக்கள் "ஹா ஹா அந்த சாமிக்கிந்த ஊரே போதாதே: நாங்கள் அடக்கி வைத்திருக்கிறோம். கேட்டவாளுக்கு கேட்ட வரத்தைக்கொடுக்கிற சாமியாச்சே" என்றான்.

அதுகேட்ட கிராமாதிபன் பின்னும் பயந்து என் குடும்பத்தையும் என்னையும் அந்த சுவாமி காப்பாற்றவேணுமானல் நானென்ன செய்யவேணும் நீங்கள் சொல்லுங்கள் நானந்தமாதிரியே செய்கிறேனென்றான். அதற்குக் குருக்கள் அவன் கொடுக்குமளவை யறிந்து கொண்டு இப்போ அஷ்டோத்தரத்திற்கு இரண்டு ரூபாய் கொடுக்கிறீர்களே, சகஸ்திரநாமம் விசேஷம், அது செய்தால் சுவாமி ஸர்வாபீஷ்டங்களையுங் கொடுப்பார். அதற்குப் பத்து ரூபாய் போதும் என்றான். அப்படியே தருகிறேன் நீர் நடத்திவிடும் நான் வரவேணுமென்கிற கட்டாயமில்லை என்று கூறிக் குருக்களிடம் அதுகாறும் நின்றுள்ள பாக்கிகளையும் அந்தமாதத்திற்கு வேண்டிய பத்து ரூபாயையுங் கொடுத்துத் தெருவாசற்படி வரைக்குங் கொண்டுவந்து வழிவிட்டு ஒரு கும்பிடு போட்டனுப்பிவிட்டான். அவனுஞ் சள்ளை தொலைந்ததென்று போய்விட்டான்; இவனுஞ் சள்ளை தொலைந்ததென்றிருந்துவிட்டான். இத்தகையவர்களும் இவரன்றியுள்ள போக காமிகளும் திருவாசகத்தின்கணுரைக்கும் பொருளின் பயனை அடைதற்கு உரியராகார். திருவாசகத்தின் ஒவ்வொரு வாக்கியங்களும் அன்பெனுஞ் சுவையுளழுந்திக் கிடப்பதேயாம்.—

பிரபஞ்ச மித்திரன்.

## விவேகசிந்தாமணிப் பிரசுரங்கள்.

இவை ஒவ்வொன்றும் நாணயமான இங்கிலீஷ் பைண்டு செய்து கில்ட் எழுத்துகள் பதித்துள்ளன.

**மாக்ஷிமைதங்கிய இந்தியா சக்கிரவர்த்தினியாகிய விக்டோரியா மஹாராணியவர்கள் சரித்திரம்.** 27-படங்களோடும், இந்தியா கவர்ன்மெண்டு, 'இந்தியா ஆபீஸ்' இவைகளின் அமைப்பு, அமுல்செலுத்தும் முறை விவரங்களோடும் பிரசுரிக்கப்பட்டிருக்கிறது. விலை ரூ.1-4. V. P. P. ரூ. 1-8. அதிக கில்ட்கொடுத்தது ரூ.1-6. V.P.P. ரூ. 1-10.

**புத்தரது திவ்விய சரித்திரம்.**—விலை அணு 14. V. P. P. ரூ. 1-2. அதிககில்ட்கொடுத்தது : ரூ. 1. V. P. P. மூலமாக ரூ. 1-4.

**விவேகமஞ்சரி.**—புஸ்தகம் I. இதிலடங்கியவை : (1) கோல்பர்ட்சரித்திரம். (2) சத்தியதேவதைக்கதை. (3). சிவாஜிமஹாராஜா சரித்திரம். விலை அணு 14. V. P. P. ரூ. 1-2. அதிக கில்ட்கொடுத்தது ; ரூ. 1. V. P. P. ரூ. 1-4.

இம்மூன்று புஸ்தகங்களும் கில்ட் எழுத்துகளின்றி காலிகோ கட்டடம்செய்து தனித்தனியாகவும் கிடைக்கும் :

(1) கோல்பர்ட் சரித்திரம் : துணிவியாபாரிகடையிலிருந்து முதல்மந்திரிஸ்தானத்துக்குவந்தவாலிபன்கதை. விலை அணு 5. V. P. P. அணு 8.

(2) சத்தியதேவதைகதை : விலை அணு 5. V. P. P. மூலமாக அணு 8.

(3) சிவாஜி மஹாராஜாசரித்திரம் : விலை அணு 6. V. P. P. மூலமாக அணு 9.

**ஆபத்துக்கிடமான அபவாதம் அல்லது கமலாம்பாள் சரித்திரம்.** விலை ரூ. 1-8. V. P. P. ரூ. 1-14. அதிக கில்ட் கொடுத்தது : ரூ. 1-12. V. P. P. ரூ. 2-2.

**விவேகரஸத்தாலாட்டு.** 6 பை. தபாற்கூலி 6 பை.

வேண்டுவோர் சென்னை திருவல்லிக்கேணி **அ. ப.** ஏஜன்ஸி, காரியதரிசி ஸி. வி. சாமிநாதய்யர் அவர்களுக்கு எழுதிப் பெற்றுக்கொள்ளலாம்.

### கமிஷனுக்குவிற்கப்படும் புஸ்தகங்கள்.

| | | |
|---|---|---|
| மாலதிமாதவம் | ... ... | விலை அணு 5. |
| னதயாளு... | ... ... | ,, ,, 8. |
| ல்வி விளக்கம் | ... | விலை ரூபா 1-0-0. |

தபாற்கூலி பிரத்தியேகம்.

*Apply to the D. K. Agency, Triplicane, Madras.*

---

## FOLKLORE IN SOUTHERN INDIA

### IN ENGLISH

By Pandit S. M. NATESA SASTRI, B.A.,

*Member of the London Folklore Society.*

| | | | |
|---|---|---|---|
| Part I. | Rs. 1 0 | Part III. | Rs. 1 8 |
| ,, II. | Rs. 0 8 | ,, IV. | Rs. 2 0 |

*Or Rs. 5 a Set. Postage and V. P. charges extra.*

**Only a few sets available.**

**Don't miss this opportunity to secure a rare work which is now out of print.**

*Apply sharp to the Secretary, D. K. Agency, Triplicane.*

---

THE

## GOSPEL OF BUDHA:

BY

## PAUL CARUS.

**Paper cover: Price Rs. 1-8.**

**By V. P. post Rs. 1-14.**

Only a few copies on hand.

***Apply sharp to the Secretary***

D. K. AGENCY,

*Triplicane,*

**Madras.**

Vol. X.] NOVEMBER, 1901. (REGISTERED-NO. M. 108.) [No. 7.

# THE VIVEKA CHINTAMANI

## A MONTHLY TAMIL MAGAZINE AND REVIEW.

DEVOTED TO THE DIFFUSION OF GENERAL KNOWLEDGE.

# விவேகசிந்தாமணி

அறிவைப் பரவச்செய்வதற்கான மாதாந்தரத் தமிழ்ப்பத்திரிகை.

"அறிவுடையா ரெல்லா முடையா ரறிவிலா
ரென்னுடைய ரேனு மிலர்."—குறள்.

CONTENTS. PAGE.



அட்டவணை. பக்கம்.



[...k Paper Edition for Patrons.] PUBLISHED BY [Minimum Subscription Rs. 5.

C. V. SWAMINATHA AIYAR,

Secretary, Diffusion of Knowledge Agency, Triplicane,

MADRAS.

[Thin Paper Edition for the People. Price of Single Copy As. 6.]



[Subscription Price: Yearly Rs. 4; If Paid Half-Yearly Rs. 2-2.

FOR FULL TERMS OF SUBSCRIPTION SEE INSIDE.

...ND PUBLISHING OFFICE: }

{PRINTING OFFICE: GRA... POPHAM HO...

## MADRAS RAILWAY CO.



### Surplus Stores for Sale.

சென்னை ரயில்வே கம்பெனியாரிடம் மிகுந்துபோன சாமான்கள், யந்திரங்கள், இன்னும் பலவிதமான உபகரண சாமான்கள் விற்பனைக்கிருக்கின்றன. அவற்றில் சில கீழே குறிக்கப்பட்டிருக்கின்றன.

Blocks, iron, galvanized, of sorts and sizes.
Balances, Pooley's, to weigh 400 lbs.
Beam, for tripod scale.
Chains, iron.
Compasses, proportional, and Napier's.
Divers' Boots.
Emery flour and powder.
Fish Plates, Bolts and Nuts.
Measures, tin, oil graduated.
Nails, brass-headed.
Optical square.
Panel pens $1\frac{1}{4}'' \times 1\frac{1}{2}''$ No. 14.
Paper binders with brass screws.
Paper Drawing Demy.
Do. Do. Mounted Foolscap size.
Paper Drawing Letter size.
Do. Loan, Medium size.
Powder, Terra de Sienna burnt.
Paper, Tracing 60" x 40"
Pincers, carpenters,'
Pipes, Copper $5\frac{3}{4}$."
Do. Do. 6,"
Rails, iron, double-headed,
Ratchets for Screw Jacks.
Rulers, rolling, parallel.
Wire, brass, B. S. W. G. Nos. 12 and 17.

விற்பனைக்கிருக்கும் சாமான்களின் ஜாடாவான ஜாப்தா. அதன் விலை குறிக்கப்பட்டுத் தயாராயிருக்கிறது. ராயபுரத்திலிருக்கும் சென்னை ரயில்வே ஜெனரல் ஸ்டோர்கீபருக்கு எழுதிக் கேட்டுப் பெற்றுக்கொள்ளலாம். சாமானைப் பார்க்க விரும்புகிறவர்கள் ஆபீஸ்நேரத்தில் வந்து பார்வையிடலாம்.

H. BONHAM CARTER, MAJOR, R. E.,
Agent & Manager.

Madras Railway,
Agent and Manager's Office,
Royapuram Terminus,
... June, 1901.

...column per
..., Madras.

# TIRUVACHAGUM

OF

# MANICKAVACHAGAR,

BY

Rev. G. U. POPE, M. A., D. D.

With Introduction, Translation, &c.

**Price Rs. 10. Postage, &c., Extra.**

Apply with remittance to

**The D. K. Agency, Triplicane,**

OR

**The Siddhanta Deepika Office, Madras.**

---

### NOTICE.

The Editor of this Journal who has just re[covered] from a long and tedious illness bein[g] compelled under medical advice to take 6 month[s] complete rest, the conduct of this Journal h[as] been entrusted to a valued friend, who will carr[y] it on, on the same lines as hither tofore. A[ll] literary contributions to be addressed merel[y] "To the Editor" without any name.

1ST NOVEMBER 1901.

---

### விளம்பரம்.

இப்பத்திரிகையின் ஆசிரியர் நீடித்து காயலாவா[ய்]விருந்து இப்பொழுதுதான் அனுகூலப்பட்டிருக்கிறா[ர்.] இன்னும் 6-மாசத்துக்கு யாதொருவேலையும் செய்[ய]டாதென்று டாக்டர் சொல்லுவதால், இப்பத்[தி...] நடத்தும் வேலை, நமது அரிய நண்பர் ஒருவ[...]விக்கப்பட்டிருக்கிறது. அவர் எப்போது[...] பத்திரிகையை நடத்திவருவார். விஷயங்கள் [...]புவோர் "பத்திராசிரியருக்கு" என்று வே[...]காமல் விலாசம் எழுதவேண்டும்.

1901-ஆ நவம்பர் 1உ.